# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி :
71231



விவரங்களுக்கு :
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# வாசகர்களின் கவனத்திற்கு

தமிழ் நாட்டில் தமிழில் உள்ள பத்திரிகைகளிலேயே முத்த பத்திரிகை ஸ்ரீ ராம கிருஷ்ண விஜயம்தான். தமிழில் இன்றுள்ள மாத, வார, நாள் இதழ்களில் அனைத்துமே விஜயத்திற்குப் பிறகு தோன்றியவையே ஆகும்.

வரும் ஆண்டு டிசம்பர் இதழோடு விஜயத்திற்கு 60 ஆண்டு நிறைவு பெறுகிறது.

60-ஆவது ஆண்டு நிறைவை முன்னிட்டு ஜனவரி இதழ் 100 பக்கங்களுக்குச் சற்று கூடுதலாகவே மணி விழா மலராக வெளிவர இருக்கிறது.

ஆர்ட் பேப்பரில் தெய்வங்களின் வண்ணப்படம் எதையேனும் மணிவிழா மலரில் வெளியிட விருப்பப்படும் அன்பர்கள் அதற்குரிய செலவை ஏற்பதாயின் விஜயத்தின் காரியாலயத்துடன் தொடர்புகொள்ளலாம்.

விஜயம் தற்போது 6,500 பிரதிகள் அச்சாகின்றன. சந்தாதாரர்கள் மணிவிழா மலருக்கென்று தனியாகக் கட்டணம் ஏதும் செலுத்த வேண்டியதில்லை. சந்தாதாரர் அனைவருக்கும் மணிவிழா மலர் கிடைக்க வேண்டும் என்பதற்காகவே இவ்விதம் செய்துள்ளோம்.

சந்தாதாரர்களிடம் மலருக்கென்று தனியாகக் கட்டணம் வசூலிக்காத நிலையில் மணி விழா மலர் வெளியிடுவதற்கு ஆகும் செலவை விளம்பரங்கள் சேகரிப்பதன் முலம்தான் ஈடு செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது.

எனவே இந்தப் புனிதப் பணி சிறந்த முறையில் நடந்தேற விளம்பரங்களைத் தந்தும் சேகரித்தும் உதவும்படி அன்பர்களைக் கேட்டுக்கொள்கிறோம். 1980 டிசம்பர் 10-ஆம் தேதிக்குள் விளம்பரங்களை விஜயம் காரியாலயத்திற்குக் கிடைக்கச் செய்யக் கோருகிறோம்.

## விளம்பரக் கட்டணம்

## ADVERTISEMENT TARIFF

| | | | |
|---|---|---|---|
| Fourth cover page | (FULL) | ... | Rs. 500 |
| Second & Third cover page | ,, | ... | Rs. 400 |
| Below contents | ,, | ... | Rs. 200 |
| Ordinary full page | | ... | Rs. 300 |
| ,, half page | | ... | Rs. 175 |
| quarter page | | ... | Rs. 100 |

## MECHANICAL DATA

Size : Full page 8″×6″ Half page 4″×6″

*Blocks : 65 Line Screen for cover pages and inside pages*

**25% Rebate for Contract for a year**

*All communications to be addressed to :*

The Manager

**SRI RAMAKRISHNA MATH**

MADRAS - 600 004 : India

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—60 | நவம்பர் 1980 | இதழ்—11 |
|---|---|---|

## பொருளடக்கம்



## இந்த இதழின் அட்டைப் படம்

கடந்த ஆண்டு நவம்பர் இதழில் வெளிவந்த 'அன்னபூரணி' என்ற கட்டுரையிலும் தீபாவளி பற்றிய சில தகவல்கள் இடம் பெற்றுள்ளன.

தீபாவளியின்போது காசி க்ஷேத்திரத்தில் தங்க அன்னபூரணியின் தரிசனம் விசேஷத்திலும் விசேஷமாகக் கருதப்படுகிறது.

எப்போதும் ரிசர்வ் பேங்கில் வைக்கப்பட்டிருக்கும் தங்க அன்னபூரணியின் விக்கிரகம், வருடத்தில் ஒரு முறை தீபாவளியின்போது மட்டும் வெளியே எடுக்கப்பட்டு, விசேஷ பூஜைகளை நடத்திக் காசியில் பக்தர்களின் தரிசனத்திற்குக் கோவிலில் வைக்கப் படுகிறது. தீபாவளி முடிந்ததும் மீண்டும் ரிசர்வ் பேங்கிற்கே தங்கத்தாலான அந்த விக்கிரகம் திரும்பிவிடுகிறது.

இந்த இதழின் அட்டைப் படமாகக் காசி க்ஷேத்திரத்தில் தீபாவளியின்போது தரிசிக்கப்பெறும் தங்க அன்னபூரணி விக்கிரகம் இடம் பெற்றுள்ளது. விக்கிரகத்தைச் சுற்றியிருக்கும் காட்சி, ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்தின் ஓவியர் எஸ். கணேசன் அவர்களின் கற்பனையாகும்.

—o—

### எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள் (கவிதைகள் அனுப்ப வேண்டாம்), மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முதலிய எதையும் தபால் மூலமே அனுப்பவேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும் கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம். காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுதப்படவேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெருத அன்பர்கள் போதிய தபால் தலைகளை அனுப்பிவைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறேம்.

ஆசிரியர்
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

தொகுதி 60 | ரௌத்திரி ஹு கார்த்திகை மீ | இதழ் 11




नमस्तेऽस्तु महामाये श्रीपीठे सुरपूजिते ।
शंखचक्रगदाहस्ते महालक्ष्मि नमोऽस्तु ते ॥

நமஸ்தேऽஸ்து மஹாமாயே ஸ்ரீபீடே ஸுரபூஜிதே ।
சங்கசக்ரகதாஹஸ்தே மஹாலக்ஷ்மி நமோஸ்து தே ॥

மஹாமாயே, செல்வத்திற்கு இருப்பிடமானவளே, தேவர்களால் வழிபடப்பெறுகிறவளே, உனக்கு நமஸ்காரம் உரித்ததாகும்; சங்கு, சக்கரம், கதை ஆகியவற்றைக் கையில்உள்ளவளே, மஹாலக்ஷ்மியே, உனக்கு நமஸ்காரம்.

என்செய லாவது யாதொன்றும்
இல்லை இனித்தெய்வமே
உன்செயலே என்று உணரப்பெற்றேன்
இந்த ஊனெடுத்த
பின் செய்த தீவினை யாதொன்றும்
இல்லை பிறப்பதற்கு
முன் செய்த தீவினையோ இங்ஙனே
வந்து மூண்டதுவே.

— பட்டினத்தார்



# தீபாவளி விழா

ந. ரா. முருகவேள்



### திருவிழாக்கள்

திருவிழாக்கள் நாட்டு மக்களின் இன்ப வாழ்வையும், செல்வச் செழிப்பையும், கலையுணர்வையும், இனிய பழக்க வழக்கங்களையும், நன்கினிது உணர்த்த வல்லனவாகும். விழாக்கள் மக்களிடையில் அன்பையும் ஒற்றுமையும் வளர்க்கின்றன. துன்பமும் கவலையும் போக்கி, இன்பமும் உவகையும் அளிக்கின்றன.

விழா, சாறு, சிறப்பு என்பன ஒருபொருட் சொற்கள். மக்கள் அன்புடன் கூடி விழைவுடன் கொண்டாடுவது 'விழா' ; வாழ்க்கை இன்பம் கனிந்த பழச்சாறு என்று சொல்லும் வகையில் பயன் நிரம்பி விளங்குவன 'சாறு' ; சுவையிலாப் பேதை மனித வாழ்வுக்கு ஓரளவேனும் சுவையூட்டி, இனிமை பெருக்கிச் சிறப்பை அளிக்கும் நிகழ்ச்சிகள் 'சிறப்பு' எனப்பெறும்.

### சங்ககால விழாக்கள்

சங்க நூல்களில் 'விழவுமலி மூதூர்', 'சாறயர் மூதூர்' என்னும் தொடர்கள் பலவிடத்தும் பயின்று வருதலின், பண்டைத் தமிழ்நாட்டில்,பல்வேறு விழாக்கள் நிகழ்ந்து வந்தமை உணரப்படும். 'இறையனர் களவியல்' உரையில், ஆசிரியர் நக்கீரர் பண்டை நாளில் தமிழகத்தில் நடைபெற்று வந்த பெருவிழாக்கள் என, மதுரை ஆவணி அவிட்டம், உறையூர்ப் பங்குனி உத்ரம், கருவூர் உள்ளித விழா என்பனவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

''கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் உறந்தையொடு
உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே''

என வரும் நற்றிணைப் பாடல், இந்தச் செய்தியை வலியுறுத்தும்.

### தீபாவளி விழா

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களால், இவ் விழாக்களைப் பற்றி மட்டுமேயன்றி, புகார் நகரில் நிகழ்ந்த இந்திர விழாவைப் பற்றியும் நாம் அறியப் பெறுகிறோம்.

இங்ஙனம் பழந்தமிழ் இலக்கியங்களால் உணரப்படும் விழாக்கள் பற்பல ஆயினும், அவற்றுள் தீபாவளியைப் பற்றிய குறிப்பு ஏதும் நம் பழந்தமிழ் இலக்கியங்களுள் காணப்படவில்லை.

தீபாவளி விழா இந்தியா முழுவதிலும் இந்துமத மக்கள் அனைவராலும் கொண்டாடப்பெறுகிறது. ஜைனர்களும் சீக்கியர்களும்கூடத் தீபாவளி விழாவைக் கொண்டாடுகின்றனர். நாட்டின் பல பாகங்களில், பல மக்களால், பலகாலமாகக் கொண்டாடப்பெற்று வருவதனுல், தீபாவளி விழாவைப் பற்றிப் பற்பல வகையான ஐதிகங்கள் வழங்கி வருகின்றன.

ஐப்பசி மாதத்தில் அமாவாசைக்கு முன் வரும் திரயோதசி–சதுர்த்தசி–அமாவாசை–அதனை அடுத்த சுக்கிலப் பிரதமை ஆகிய நான்கு நாட்கள், தீபாவளியோடு தொடர்

புடைய நாட்கள் ஆகும். இந்த நான்கு நாட்களில் திரயோதசியையும் சதுர்த்தசியையும் முதன்மையாகக் கொண்டு அதில் தீபாவளி கொண்டாடுவர் தென்னக மக்கள். அமாவாசையும் பிரதமையையும் முதன்மையாகக் கொண்டு குஜராத்தியர் மார்வாரியர் ஆகியோர் தீபாவளி கொண்டாடுகின்றனர். அன்று அவர்கள் புதுக்கணக்குகள் தொடங்குவர்.

தீபாவளியன்று நாம் வைகறையில் எழுந்திருந்து, தீபம் ஏற்றி வைத்து, அதனைத் திருமகளாகக் கருதித் துதித்து வழிபட வேண்டும். எண்ணெய் வெற்றிலை பாக்கு பழம் தின்பண்டங்கள் ஆகியவற்றைத் திருமகள் முன்பு வைத்து நிவேதனம் செய்ய வேண்டும். திருமகளின் முன்பு வைத்து வழிபடப்பெற்ற எண்ணெயை தலையில் இட்டுத்தேய்த்துக்கொள்ளுதல், திருமகளின் அருளைத் தரும். இந்த எண்ணெயில் திருமகளின் அருள் விளங்குவதாகவும், அன்று நீராடும் வெந்நீரில் கங்கை வதிவதாகவும், புராணங்கள் கூறும். அன்று விடியலிற் சூரியன் உதிக்கும் முன் எண்ணெய் தேய்த்து நீராடுவோர், கங்கையில் நீராடிய பலன் பெறுவர். பொழுது விடிந்த பிறகு தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்பெறும். அப்போது வகைவகையான பல இனிய சிற்றுண்டிகளைச் செய்து இறைவனுக்குப் படைத்தும், புத்தாடைகளை அணிந்தும் அன்று யாவரும் மகிழ்வர். நண்பர் உறவினர் ஆகியோர் இல்லங்களுக்குச் சென்று கலந்து பழகி மகிழ்வர்.

வரலாறுகள்

1. தீபாவளியைப் பற்றிப் பற்பல வரலாறுகள் கூறப்பட்டு வழங்கி வருகின்றன. கண்ணபிரான், உலக மக்களுக்குப் பெருந் துன்பம் விளைவித்து வந்த நரகன் என்ற கொடிய அசுரனை வதம் செய்தபோது, அவனுடைய கடைசி வேண்டுகோளுக்கு ஏற்ப, தீபாவளிப் பண்டிகை கொண்டாடப் படுகிறது. வட இந்தியாவில் நரகாசுரனைப் போல உருவங்கள் செய்து, அவற்றைக் கொளுத்திக் கண்ணபிரானின் வெற்றியைக் கொண்டாடுவர். நரகாசுரனைக் கொன்ற நாள் சதுர்த்தசியாதலின், இது நரக சதுர்த்தசி எனப்பெறும்.

2. பிரகலாதனுடைய பேரனும், திருமாலின் அடியவனுமாகிய மகாபலி சக்கரவர்த்தி முடிசூட்டிக்கொண்ட நாள் தீபாவளி என்றும், அன்று ஏற்றப்பெறும் தீபம் 'பலி தீபம்' என்றும் வாமன புராணம் முதலியன கூறுகின்றன. மகாராஷ்டிரப் பகுதியில் சில இடங்களில் தீபாவளியன்று மகாபலியின் உருவம் புனைந்து வழிபாடு செய்வது வழக்கம்.

3. இராமபிரான் இலங்கைக்குச் சென்று இராவணனைக் கொன்று, விபீஷணனுக்கு முடிசூட்டிவிட்டு, சீதைப்பிராட்டியுடன் அயோத்தி மாநகர் வந்து சேர்ந்தபொழுது, மக்கள் எல்லோரும் நகரத்தை அழகு செய்து, இரவில் தீபம் ஏற்றி வைத்து, இராமபிரான் மீது தாங்கள் கொண்டிருந்த எல்லையற்ற பேரன்பை வெளிப்படுத்தித் தமது மகிழ்ச்சியை விழாவாகக் கொண்டாடினார்கள். அதன் நினைவாகவே தீபாவளி விழாக் கொண்டாடப் பெறுகிறது என்றும் சிலர் கூறுவர்.

4. ஜைன சமயத்தவர்கள் தீபாவளி விழாவைப் பற்றி, வேறோர் ஐதிகம் கூறுவர். ஜைனர்களின் சிறப்பு மிக்க தீர்த்தங்கரரான மகாவிர வர்த்தமானர் பரிநிருவாணம் என்னும் வீடுபேறு எய்திய நாளே தீபாவளித் திருநாள் என்றும், தவஞானப் பேரொளியாக விளங்கியிருந்த அந்தப் பெருஞ் சான்றோரின் மறைவினால், உலகிற்கு நேர்ந்த ஒளி யிழப்பை ஈடுசெய்து நிரப்பி இருளை விலக்கி ஒழிக்கும் வகையில், அவர்தம் வழிபாட்டு நினைவாகவே அன்று ஏராளமான தீபங்கள் ஏற்றப்பெறுகின்றன என்றும் ஜைனர்கள் கூறுகிறார்கள்.

5. கண்ணபிரான் இந்நிலவுலகை விட்டு நீங்கிப் பரபதமாகிய வைகுந்தத்திற்கு மீண்டு சென்று சேர்ந்தருளிய நாள்தான் தீபாவளி என்றும் கூறப்படுகிறது.

6. இந்திய நாட்டு அரசர்களுள் மிகவும் புகழ்பெற்ற ஒருவன் விக்கிரமன். அவன்

ஏற்படுத்தியதே 'விக்கிரம சகாப்தம்' என்னும் காலக் கணக்காகும். வட இந்தியாவிலும் மேற்கிந்தியாவிலும் உள்ள இந்துக்கள், பெரும்பாலும் விக்கிரம சகாப்தத்தையே காலக் கணக்கிடுவதற்குக் கையாளுவர். அத்தகைய விக்கிரம சகாப்தத்தை ஏற்படுத்திய விக்கிரமன் என்னும் வேந்தன், கார்த்திகைச் சுக்கிலம் பிரதமையில் முடிசூடிக்கொண்டான் என்றும், அதன் நினைவாகவே தீபாவளி விழாவை மக்கள் கொண்டாடத் தலைப்பட்டனர் என்றும் சிலர் கூறுவர்.

7. புரட்டாசி மாதத்தில் (பாத்ரபதம்), தேய்பிறை நாட்களில், மகாலய தினத்தில் தென்புலத்தார் என்னும் பிதிரர்கள் பிதுர் லோகங்களிலிருந்தும். நரகம் சேர்ந்தவர் நரக லோகங்களிலிருந்தும் விடுதலை பெற்று, ஐப்பசித் தேய்பிறை வரையில் நிலவுலகில் வந்து, தங்கிச் சுற்றத்தார் கொடுக்கும் பிண்டம் தர்ப்பணம் முதலியவற்றைப் பெறுவர். பின்னர்த் தத்தம் உலகங்களுக்குச் செல்வர். நரக சதுர்த்தசியன்று, சுற்றத்தார் கொள்ளியைக் கையில் கொண்டு பிதுர்க்களுக்கு வழிகாட்டுவர் எனவும் சிலர் கூறுவர். எம தர்ப்பணம் எமதீபதானம் என்னும் சடங்குகளையும் சிலர் செய்வதுண்டு.

8. தமிழ்நாட்டு மக்கள் கார்த்திகைத் திங்கள் முழுமதி இரவில் விளக்குகளை வரிசை வரிசையாக வைத்து, அவற்றின் ஒளிவடிவில் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளைக் கண்ணாரக் கண்டு வணங்கி வரும் வழக்கம் உடையவர். பழந்தமிழ்ச் சங்க நூல்களில் 'கார்த்திகை விளக்கீடு' பற்றிய குறிப்புகள் பல வருதலைக் காணலாம்.

"மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழாவுடன் அயர வருகதில் அம்ம !"

என்பன போல வரும் சங்க நூற் பாடற் பகுதிகள், கார்த்திகை விளக்கீட்டின் கீர்த்தியை

[தொடர்ச்சி 373-ஆம் பக்கம் பார்க்க]

## வளவாழ்வுக்குச் சில உறுதிமொழிகள்

ஒவ்வொருவரும் இந்த உறுதிமொழிகளை ஏற்று அவற்றின்படி நடந்துகொள்ளவேண்டும்; அவை யாவன:

"பிறர் பொருளில் ஆசை கொள்ளமாட்டேன்."

"அநுதினமும் பணிபுரிந்து நூறுண்டு வாழ்வேன்."

"அனைவரையும் நண்பராகக் கண்டு பழகிக் களிப்புடன் நூறுண்டு வாழ்வு வாழ்வேன்."

"தேவைக்கு மட்டுமே திட்டமிட்டு பொருளீட்டி, எவரிடமும் கையேந்தி இரக்காமல், நூறுண்டு வளவாழ்வு வாழ்வேன்"

"என் மனதில் மங்கலமான எண்ணங்களே எழ வைப்பேன்"

"உண்மையே நம்பிக்கை என்பது; பொய்யே அவநம்பிக்கை — இதுவே ஆண்டவனின் கட்டளை. எனவே, அனைவரும் நம்பிக்கை கொள்ளும் சத்தியத்தில் நூறுண்டு வாழ்வேன்."



— சுக்ல யஜுர்வேதம், 36-24.



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**செவ்வாய்க்கிழமை, ஜூன் 5, 1883**

இன்று அமாவாசைத் தினம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தட்சிணேசுவரக் காளி கோவிலில் தமது அறையில் இருந்தார். ராக்கால் குருதேவருடன்தான் தங்கி வருகிறார். ஹாஸ்ராவும் அங்கேதான் வாழ்ந்து வந்தார். ம— ஞாயிற்றுக்கிழமை அங்கே வந்தவர், இன்னும் குருதேவருடன் தட்சிணேசுவரத்திலேயே தங்கியிருக்கிறார். அவர் இன்னும் சில நாள் அங்கேயே தங்க உத்தேசித்திருக்கிறார். ஞாயிற்றுக்கிழமைகளில், விடுமுறை நாள் ஆனதனால் குருதேவரைத் தரிசிப்பதற்குப் பெருமளவில் பக்தர்கள் வருவார்கள். இன்று செவ்வாய்க்கிழமை வேலைநாள் என்பதனால் பக்தர்களின் கூட்டம் அங்கு அதிகமாக இல்லை.

திங்கட்கிழமையான நேற்றிரவு காளி கோவிலில் உள்ள 'நாட் மந்திர்' எனப்படும் மண்டபத்தில் கிருஷ்ண கதாகாலட்சேபம் நடந்தது. குருதேவர் சிறிது நேரம் அதைக் கேட்டுக்கொண்டிருந்தார். இந்தக் கதாகாலட்சேபம் ஞாயிற்றுக்கிழமை இரவே நடைபெறுவதாக இருந்தது. ஆனால் அவ்விதம் அன்று நடைபெறாமற் போனதனால் திங்கட்கிழமை இரவு நடந்தது.

இப்போது நடுப்பகல். மதிய உணவுக்குப் பின்பு பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், தமது பிரேமைப்பித்து நிலையைப் பற்றிய பழைய அனுபவங்களைப் பக்தர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (ம—விடம்): ஆ! நான் அந்த நாளில் எப்படிப்பட்ட மனநிலைகளில் எல்லாம் இருந்திருக்கிறேன்! அப்போதெல்லாம் நான் இங்கே தட்சிணேசுவரக் கோவிலில் சாப்பிடவே மாட்டேன். வராகநகரத்திலோ, தட்சிணேசுவரக் கிராமத்திலோ, அரியதாஹா என்ற இடத்திலோ உள்ள யாராவது ஒரு பிராம்மணர் வீட்டிற்குப் போவேன். அதுவும்கூட, எல்லோரும் சாப்பிட்டு முடித்துச் சாப்பாட்டு வேளை கடந்தபிறகு அகாலநேரத்தில்தான் போவேன். ஆனால், அங்கு வீட்டுக்குள் சென்று உட்கார்ந்து கொள்ளுவேனே தவிர, வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேச மாட்டேன். அந்த வீட்டைச் சேர்ந்தவர்கள், 'ஏன் இங்கே வந்தாய்?' என்று ஏதாவது கேட்டால், 'எனக்குச் சாப்பிட ஏதாவது வேண்டும்' என்று மட்டும் சொல்வேன். அதற்குமேல் அவர்களிடம் வேறு எந்தவிதப் பேச்சும் வைத்துக்கொள்ள மாட்டேன். சில சமயங்களில் ஆலம் பஜாரில் உள்ள ராம்சட்டர்ஜியின் வீட்டிற்கோ, தட்சிணேசுவரத்திலுள்ள ஸாவர்ண சௌதுரியின் வீட்டிற்கோ இது போலச் சாப்பிடச் செல்வேன். அழைப்பில்லாமல்தான் போவேன்! ஆனால் ஸாவர்ண சௌதுரியின் வீட்டுச் சாப்பாடு எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அந்தச் சாப்பாடு அருவருக்கத்தக்க வகையில் ஏதோ ஒருவிதமான துர்நாற்றம் வீசும்.

ஒரு நாள் தேவேந்திரநாத் தாகூரின் வீட்டிற்கு என்னை அழைத்துச் செல்லும்படி மதுரபாபுவிடம் கூறினேன். "தேவேந்திரநாத்

தாகூர் பகவானின் நாமத்தை ஜபிக்கிறு ராம். நான் அவரைப் பார்க்க விரும்பு கிறேன். நீ என்னை அவரிடம் அழைத்துப் போகிறுயா ?'' என்று கேட்டேன்.

ஆனுல் மதுரபாபுதாம் மிகவும் கௌரவம் பார்ப்பவர் ஆயிற்றே! அழைப்பு இல்லாத நிலையில் அவராகவே மற்றொருவர் வீட்டைத் தேடிப் போவாரா என்ன? முதலில் சிறிது தயங்கத்தான் செய்தார். கடைசியில் ஒரு விதமாக இணங்கி வந்து, "சரி, தேவேந்திர னும் நானும் பள்ளியில் ஒன்ருகச் சேர்ந்துப் படித்தவர்கள். வாருங்கள், நான் உங்களை அவரிடம் அழைத்துப் போகிறேன்'' என்ருர்.

மற்றொரு நாள், பாக்பஜாரில் உள்ள பாலத்தின் அருகில் தீனமுகர்ஜி என்ற பெயர் கொண்ட நல்லவர் ஒருவர் வாழ்ந்து வருவதாக கேள்விப்பட்டேன். அவர் ஒரு சிறந்த பக்தர். அவரிடம் என்னை ஒரு நாள் அழைத்துச் செல்ல வேண்டும் என்று மதுர பாபுவிடம் தெரிவித்தேன். மதுரபாபு என்ன செய்வார்! நான் விடாப்பிடியாக இருந்ததைக் கண்ட அவர், என்னைத் தமது பெரிய வண்டியில், தீனமுகர்ஜியின் வீட் டிற்கு அழைத்துச் சென்ருர். தீனமுகர்ஜி யின் வீடோ மிகவும் சிறியது. ஆனுல் ஒரு பெரிய வண்டியில் ஒரு பெரிய மனிதர் அங்கே போய்ச் சேர்ந்தார்! அந்த வீட்டைச் சேர்ந்தவர்கள் பிரமித்து நின்றுவிட்டார்கள். நாங்களும் பிரமித்து நின்ருேம். விஷயம் என்னவென்ருல், மதுரபாபுவைப் போன்ற பெரிய மனிதர் திடீரென்று அந்த வீட்டைத் தேடிச் சென்றது, அந்த வீட்டில் உள்ளவர் களுக்குத் தர்மசங்கடத்தை உண்டு பண்ணியது. யாரும் எங்களை எதிர்பார்க்க வில்லை. நாங்களும் தீனமுகர்ஜியின் வீடு அவ்வளவு சிறியதாக இருக்கும் என்று எதிர் பார்க்கவில்லை. எங்களுக்கும் தர்மசங்கட மாகப் போய்விட்டது. மேலும், அன்றைய தினம் தீனமுகர்ஜியின் மகனுக்கு உபநயன விழா வேறு அப்போது நடந்துகொண் டிருந்தது. அந்தச் சிறிய வீடு முழுவதிலும் கூட்டம் நிரம்பி வழிந்தது. தீனமுகர்ஜி எங்களை எங்கே வரவேற்று உட்கார வைப் பார்? எங்கு உட்காருவது என்று திகைத் தோம். பிறகு நாங்கள் வீட்டினுள் ஒரு பக்க மாக இருந்த அறைக்குள் நுழையப் போனேம். உடனே அதற்குள், "அங்கே போகாதீர்கள்! அந்த அறையில் பெண்கள் இருக்கிருர்கள்!'' என்று யாரோ கத்தினுர்கள். ஒரே குழப்பம். அந்தச் சூழ்நிலை உண்மை யிலேயே எங்களுக்குப் பெரிதும் சங்கடத்தை உண்டுபண்ணியது.

திரும்பி வந்தபோது மதுரபாபு என்னிடம், "பாபா (தந்தை), இனிமேல் நான் உங்கள் பேச்சைக் கேட்கபோவதே இல்லை!'' என்று கூறினுர். நான் அவர் அவ்விதம் சொன்ன தைக் கேட்டுச் சிரித்தேன்.

ஆகா! எப்படிப்பட்ட ஆன்மிக நிலைகளி லெல்லாம் நான் இருந்திருக்கிறேன்! குமார் சிங் ஒரு சமயம் சாதுக்களுக்கு விருந்து வைத்தார். என்னையும் அதில் கலந்து கொள்ள அழைத்திருந்தார். அதற்கிணங்க நான் சென்றபோது சாதுக்கள் பலர் அங்கு வந்திருந்ததைக் கண்டேன். நான் சாப்பிடு வதற்கு அங்கு ஓரிடத்தில் உட்கார்ந்ததும் சாதுக்கள் சிலர் என்னைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு என்னிடம் பல கேள்விகளைக் கேட்டார்கள். இவ்வாறு அவர்கள் என்னை விசாரிக்க ஆரம்பித்ததும், அவர்களை விட்டுத் தனியாகப் போய் உட்கார்ந்து கொள்ள லாமா என்று நினைத்தேன். என்னைப்பற்றித் தெரிந்துகொள்வதனுல் இவர்களுக்கு என்ன லாபம் என்று நினைத்துக்கொண்டேன்.

அதன்பிறகு இலை போட்டு எல்லோரையும் சாப்பிடுவதற்கு உட்கார வைத்தார்கள். 'சாப்பிடுங்கள்' என்று சொல்லி, எல்லோரும் சாப்பிட ஆரம்பிப்பதற்கு முன்பாகவே, நான் சாப்பிடத் தொடங்கிவிட்டேன். அங் கிருந்த சாதுக்களில் பலர், "ஹோ! யார் இந்த ஆள்! இந்த மாதிரி நடந்துகொள் கிருரே?'' என்று என்னைப் பற்றிப் பேசிக் கொண்டது என் காதில் விழுந்தது.

* * *




# துளசி ராமாயணம்

ஸ்ரீராமபிரானின் குணாதிசயங்களை வர்ணிக்கும் நூல்தான் ராமசரித மானஸ். அதைப் பக்தியில் தோய்ந்த நிலையில் கோசுவாமி துளசிதாசர் இயற்றியுள்ளார்.

அறிஞர் பலரும் வரலாற்று அடிப்படையில் அமைந்த விஷயங்களையே பிரமாணம் என்றும், உண்மை என்றும் ஒப்புக்கொள்வார்கள். அவர்களின் மனநிலைக்குப் பொருந்தும் வகையில் வால்மீகி முனிவர் நடந்ததை நடந்தபடியே தமது இராமாயணத்தில் வரைந்துள்ளார்.

வால்மீகி இராமாயணம் வரலாற்றின் அடிப்படையில் இயற்றப்பட்ட நூலாகும். துளசி ராமாயணம் பக்தி என்னும் மனோபாவத்திற்கே முதலிடம் தந்து இயற்றிய நூலாகும். இந்த இரண்டுமே சமுதாய நலனுக்கு அவசியமானவைகளே ஆகும்.

வரலாற்றுக்கு முதலிடம் தந்து இயற்றப்பட்டிருக்கும் வால்மீகி ராமாயணம் காலம் தேசம் போன்ற வரையறைகளுக்கு உட்பட்டிருக்கிறது. எனவேதான் பாவம் நிறைந்த துளசிதாசரின் போக்கில் தோன்றிய ராமசரித மானஸ் என்ற நூல் வால்மீகி முனிவரின் இராமாயணத்திலிருந்து வேறுபட்டதாக விளங்குகிறது. பாவம் எனப்படும் மனநிலை கால தேச வரையறைகளைவிட உயர்ந்து நம்மை மிகவும் உயர்ந்த நிலைக்கு உயர்த்தி விடுகிறது. நம் அனைவரின் உள்ளத்திலும் பாவம் என்னும் சந்திரன் எப்போதும் இருக்கிறது. அந்தச் சந்திரனின் முழு நிலவையே நாம் நேசிக்கிறோம்.

அறிஞர்களாலும் பக்தர்களாலும் ஏற்றித் துதிக்கப் பெறும் வால்மீகி ராமாயணத்திற்கு உரிய மகத்துவம் என்றென்றும் இருந்தது இருந்தபடியே இருக்கிறது. ராய்ப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் கிளையைச் சேர்ந்த சுவாமி ஆத்மானந்தர் சென்னை இராம கிருஷ்ண மடத்தில் துளசி ராமாயணம் பற்றிய சொற்பொழிவை ஆங்கிலத்தில் நிகழ்த்தினார். அவரது சொற்பொழிவைத் தழுவி இந்த இதழின் விஜயதீபம் தரப்படுகிறது.

* * *

'மறு மனைவி கிடைத்து விடலாம். ஆனால் சகோதரன் வேறு ஒருவன் கிடைப்பான் என்று சொல்ல முடியாது' என்ற பொன்மொழி வால்மீகி ராமாயணத்தில் இடம் பெற்றிருக்கிறது.

ராமராவண யுத்தம் முடிந்துவிட்டது. ராமர் அங்கே கூடியிருந்த அனைவர் முன்னிலையிலும் சீதாபிராட்டியை அழைக்கிறார். மிகவும் இக்கட்டான சூழ்நிலை. சீதையைப் பார்த்து ராமர் கூறுகிறார்: "சீதே! நீ என் மனைவி! உன்னை அபகரித்துச் சென்றவனிடமிருந்து உன்னை மீட்டுக் காக்க வேண்டியது என் கடமை. எனவேதான் நான் உன்னை சிறை மீட்டுவிட்டேன். எனினும் நீ இவ்வளவு நாட்கள் மாற்றானான ராவணனுடைய வீட்டில் இருந்துவிட்டபடியால் மாசுடையவள் ஆகிவிட்டாய்!" —இத்தகைய வார்த்தைகளைத் துளசிதாசரின் ராமர் கூற மாட்டார். ஏனெனில் வரலாற்றுக்கு முக்கி

யத்துவம் அளிப்பவர்கள் எந்தக் கட்சியிலும் சேராமல் நடுநிலையில் இருந்துகொண்டு நீதி வழங்கும் முறையைத்தான் கடைப்பிடிக்க வேண்டும். ஆகவேதான் வால்மீகி மிகவும் கஷ்டப்பட்டுத் தமது ராமகாதையை இயற்றியுள்ளார்.

மகாபாரதத்தில் கடவுளின் சரித்திரம் (குணம்) பாடப்பட்டுள்ளது. ஆனால் பாகவதத்திலோ பகவானின் லீலைகள் பாடப்பட்டுள்ளன. பாரதத்தைப் படைத்த வியாசர் தம் மனோவியாகூலம் தீர வேறு நூலை இயற்ற நேரிட்டது. அதில், கோபியர் வேத வேதாந்தத்தின் உட்பொருள் உடல் பெற்று உயிருடன் கூட நந்தகோபனின் வீட்டில் நர்த்தனம் புரிவதைக் கண்டு மெய்ம்மறக்கிறார்கள். வியாச பகவானின் இந்த இரண்டு நூல்களிலும் பார்வையின் அடிப்படையில் தான் வேற்றுமை உள்ளது. ஒன்றில் (மகாபாரதத்தில்) குணதோஷங்களைப் பார்ப்பவர்கள் மற்றொன்றில் (பாகவதத்தில்) பக்தி பாவத்தை உணர்கிறார்கள். இது போலவே வால்மீகி முனிவரும் தாம் படைத்த ராம காவியத்திலுள்ள குறைகளைப் போக்குவதற்காகத் துளசிதாசரின் உருவத்தில் மறுபிறவி எடுக்க வேண்டியதாயிற்று. இவ்விதம் வால்மீகியே துளசிதாசராக ஆகிறார். *

அறிவைக் கொண்டு ஒரு சாஸ்திரத்தை அணுகும் போது அந்தச் சாஸ்திரத்திலுள்ள சாரம் போய்ச் சாரமற்றதாக ஆகிவிடுகிறது. அதையே பக்தி நிறைந்த இதயத்துடன் அணுகும் பக்தன், அதன் சாரத்தை உணர்ந்து அனுபவிக்கிறான்.

"நான் உருவமற்றவன். பக்தன்தான் என்னை அச்சில் வார்த்து ஓர் உருவத்தைக் கொடுத்து விடுகிறான்" என்று பகவான் கூறுகிறார்.

மனு: ஆமாம். நான்தான் அச்சைக் கொடுத்தேன்.

பகவான்: அது எப்படிப்பட்ட அச்சு?

மனு: அதில் சகுணமும் (உருவம்) இருக்கிறது; நிர்க்குணமும் (அருவமும்) இருக்கிறது. நானே அச்சைக் கொடுத்து விட்டேன். ஆகையால் தாங்கள் கண்டிப்பாக வந்துதான் ஆகவேண்டும்.

கடைசியாகப் பகவான் வந்தே விட்டார். பக்தனின் வேண்டுகோளுக்கிணங்க நான்கு குணங்களுக்கும் உருவத்தைக் கொடுத்ததே போன்ற நான்கு உருவங்களுடன் வந்திருக்கிறார். அவை முறையே கர்மம், ஞானம், பக்தி, தீனம் (எளிமை) எனப்படும் நான்கு



குணங்களாகும். இந்த நான்கிலும் தீனம் எனப்படும் நான்காவதான பாதை இருக்கிறதே, இதன் வழியாகப் பகவான் தாமாகவே பக்தனைக் காண வருகிறார். அதாவது இந்த ஒரு பாதையின் வழியாகத் தான் கடவுள் தமது கிருபையினால் தாமாகவே வருகிறார்.

துளசிதாசர் தம்முடைய ராமாயணத்தை 'மானசரோவர்' என்ற ஏரியுடன் ஒப்பிட்டிருக்கிறார். ஓர் குளம் என்றால் அதற்கு நான்கு கரைகள் இருக்கும் அல்லவா? அதே போன்று ராமசரிதமானசிற்கும் நான்கு துறைகள் உண்டு. அவையே கர்மம், பக்தி, ஞானம், எளிமை எனப்படுகின்றன.

இந்த நான்கிலும் துளசிதாசர் நான்காவதாகிய தீனம் எனப்படும் எளிமையாகிய துறையையே தமதாக்கிக் கொண்டிருக்கிறார். 'ஏன் இந்தப் பாதையைத் துளசிதாசர்

* வால்மீகி முனிவரே துளசிதாசராகப் பிறந்தார் என்ற ஒரு கருத்து வழக்கத்தில் இருந்து வருகிறது.

தமதாக்கிக்கொள்ள வேண்டும்?' என்று கேட்கலாம். அதற்குத் துளசிதாசர் தரும் பதில்வருமாறு: "இந்த ஒரே ஒரு பாதையின் மூலமாகத்தான் கடவுள் எல்லோருக்காகவும் வருகிறார். அதுதான் இந்தப் பாதைக்கு உரிய ஈடு இணையற்ற தனிச் சிறப்பாகும். எனவேதான் இதை நான் என் வழி என்று சொல்கிறேன். இந்த ஒரு பாதையைத்தான் கங்கைநதியுடன் ஒப்பிட்டுச் சொல்லலாம். கங்கை தன்னுடைய நீரின் புனிதத் தன்மையினால், அதில் நீராடும் அனைவருக்கும் எந்த வித வேறுபாடும் இல்லாத நன்மையை அளிக்கிறது."

**காலில் தைத்த முள்**

இராமபிரான் தமது காலில் தைத்த முள்ளின்மீதுகூடக் கிருபை புரிகிறார். இதோ ஒரு காட்சி :—

முட்கள் நிறைந்த காட்டுப் பாதையில் இராமர் சீதையோடும் லட்சுமணனோடும் நடந்து வருகிறார். வழியில் சீதையும் லட்சுமணனும் மிகவும் களைப்படைந்து விடுகிறார்கள். லட்சுமணனும் இராமபிரானின் அனுமதி பெற்றுத் தண்ணீர் கொண்டு வருவதற்காக நீர்நிலையை நாடிப் புறப்படுகிறான்.

ஏகாந்தத்தில் விடப்பட்டதும் மெதுவாகச் சீதை இராமபிரானிடம், "சிறிது நேரம்தான் இளைப்பாறுவோமே! லட்சுமணனும் குழந்தைதானே! அவன் மிகவும் களைப்படைந்துவிட்டான்" என்று வேண்டுகிறாள்.

இராமர் பார்த்தார். தம்பி களைப்படைந்து விட்டதாகச் சீதை கூறுகிறாள். ஆனால் சீதையும்தானே களைப்படைந்திருக்கிறாள்? இராமர் உடனே எல்லாக் குற்றத்தையும் தம்மீதே போட்டுக்கொள்கிறார். பயணம் தடைப்பட்டதற்கு மனைவியும் தம்பியும் காரணம் ஆகக்கூடாதல்லவா?

உடனே இராமர் தாமே காலில் ஒரு முள்ளைக் குத்திக்கொண்டு அதை எடுக்கும் நோக்கத்தோடு சிறிது நேரம் அங்கேயே தங்குகிறார். அவர் முள்ளை மிகவும் நிதானமாக எடுக்கிறார். உண்மையில் அவர் முள்ளை எடுக்கவும் விரும்பவில்லை.

சீதை கணவரின் காலில் முள் இருப்பதைப் பார்த்துப் பதறிக்கொண்டு அதை எடுக்க முன்வருகிறாள்.

இராமர் : சீதா, உன்னால் இந்த முள்ளை எடுக்க முடியாது.

சீதை : என்ன! என்னால் எடுக்க முடியாதா!

இராமர் : என் காலடியில் வந்துள்ள ஒரு பொருளை நீ அகற்றுவது சரியில்லை. அது உனக்கு அழகைத் தராது. என்னிடம் சரணாகதி என்று வருபவர்களைக் காப்பது என் கடமை. என் காலடியில் வந்து விழுபவர்களை நான்தான் காப்பாற்றவேண்டும்.

இவ்விதம் இராமருக்கும் சீதைக்கும் நடைபெற்ற உரையாடல் கருணைக்கும் நியாயத்திற்கும் ஏற்பட்ட துவந்துவ யுத்தம் போன்று இருந்தது. நியாயம் வெற்றி பெறுவதில்லை. கருணையே வென்றுவிடுகிறது.

---



அறிவு, குடிப்பிறப்பு, அடக்கம், கல்வி, ஆற்றல், மிதமாகப் பேசுதல், தகுதிக்குத் தக்க தானம், நன்றியறிதல் இந்த எட்டுக் குணங்களும் மனிதனை ஒளிபெறச் செய்கின்றன.

எதில் பெரியோர்களில்லையோ அது சபையாகாது. எவர்கள் தருமத்தைச் சொல்லுவதில்லையோ அவர்கள் பெரியோர்கள் அல்லர். எதில் சத்தியமில்லையோ அது தருமம் ஆகாது. எது கபடத்துடன் கூடியிருக்குமோ அது சத்தியமாகாது.

—இவ்வாறு விதுரர் திருதராஷ்டிரனிடம் கூறினார்.

—மகாபாரதம்

# எல்லாம் கிடைக்கும்

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்



இவ்வுலகில் உள்ள மக்களைச் சார்ந்து பணிந்து இரந்தால் அவர்கள் நமக்கு வேண்டியதை உதவக்கூடும். மனம் பொருந்தாமல் இருந்தால் உதவாமலும் இருப்பார்கள். சிலருக்கு மனம் இருந்தாலும் நமக்கு வேண்டிய பொருள் அவரிடம் இல்லாமல் இருந்தால், அவரால் நமக்கு ஒரு பயனும் இராது.

உலகில் உள்ள யாவருமே குறைவுடையவர்கள். தேவர்களும் குறை உடையவர்களே. இந்திரன், பிரமன் ஆகியவர்களும் குறை உடையவர்களே. இறைவன் ஒருவனே குறைவிலா நிறைவை உடையவன். அவன் திருவுள்ளம் இரங்கினுல் எதைக் கேட்டாலும் தரவல்லவன். அவனைப் போன்ற வள்ளன்மை உடையவர் யாரும் இல்லை. எல்லாப் போகங்களையும் அவனுல் வழங்க முடியும். எத்தகைய இன்பங்களிலும் சிறந்ததாகிய முக்தியின்பத்தை அவன் ஒருவனுல் தான் தரமுடியும். அவனுடைய திருவுள்ளம் இரங்கி அருள் சுரக்கப் புகுந்தால், அந்த அருளால் உண்டாகாத நலமே இல்லை.

அவன் மயானத்தில் ஆடுகிறுன். தனக்கு நடன சாலையாக, அரங்கமாக பேய்கள் நிறைந்த சுடுகாட்டைக் கொண்டிருக்கிறுன் அவன். அவனை நினையாதவர்களும் அவனை வெறுப்பவர்களும்கூட அங்கேதான் போக வேண்டும். எல்லாரும் இறுதியில் வந்து சேரும் இடத்தில், மக்கள் பிறந்து இறந்து வந்து சேரும் சுடுகாட்டில், அவன் ஒருவனே என்றும் அழியாத பெருமானுக விளங்குகிறுன். அங்கே அவன் நடனம் புரிகின்றுன்.

அரங்கமாப் பேய்க்காட்டில் ஆடுவான்.

'பேயோடு ஆடும் இவன் நமக்கு என்ன தரப்போகிறுன்?' என்று எண்ணக்கூடாது. நிலையாமையை நினைப்பூட்டும் புனிதமான இடம் மயானம். அங்கே அவன் எல்லாரையும் சந்திப்பதற்காக ஆடிக்கொண்டிருக்கிறுன்.

அவனுடைய சூழ்நிலையைக் கண்டு நாம் ஏமாறக்கூடாது. அவன் நம்மிடம் இரக்கம் கொண்டு அருள் செய்யப் புகுந்தானுனல் பிறரால் வழங்க முடியாதவற்றையெல்லாம் வழங்குவான்.

இந்தக் கருத்தைக் காரைக்கால் அம்மையார் தம் நெஞ்சத்தைப் பார்த்துச் சொல்கிறுர். 'அறிவில்லாத ஏழை நெஞ்சே!' என்று விளித்துக் கூறுகிறுர்.

### ஏழாய்!

தமக்கு மிகவும் நெருக்கமாக இருக்கிற நெஞ்சைப் பார்த்துத்தான் அப்படிச் சொல்கிறுர். தம் நெஞ்சுக்குக் கூறுவது போலப் பல இடங்களில் அவர் பாடியிருக்கிறுர்.

அந்தப் பெருமானுடைய திருவுள்ளத்தில் இரக்கம் உண்டானுல் நமக்கு எல்லாம் கிடைக்கும். ஆனுல் ஏதும் செய்யாமல் உலகியலில் ஈடுபட்டு உழலும் நம்மிடம் அவன் இரக்கம் கொள்ளமாட்டான். வேலை செய்யாமல் கூலி கொடுத்தால் சோம்பேறி ஆகி விடுவோம். ஆதலால் அவன் நாம் ஒன்றும் செய்யாமல் இருந்தால், வாளா இரங்க மாட்டான்.

வாளா இரங்குமோ !

உயிர்க் கூட்டங்கள் பல. அவற்றின் வினைக்கு ஈடாக இன்பதுன்பங்களை ஊட்டு பவன் அவன். அவர்களுக்குள் சிறப்பான முயற்சி செய்பவர்களிடம் அவனுக்கு இரக்கம் மிகுதியாகும். அவர்களுக்குச் சிறப் பான அருளை வழங்குவான். நன்றாகப் படித்துத் தேர்வு எழுதியவனுக்கு ஆசிரியர் அதிகப் புள்ளி வழங்குவார். மிகச் சிறப் பாகத் தேர்ச்சி பெறுபவர்களுக்குப் பரிசு களும் கிடைக்கும். எல்லாருக்குமே தேர்ச்சிக்குரிய புள்ளிகளை வழங்கினால் பிறகு கல்விக்கு என்ன மதிப்பு உண்டாகும் ?

முயற்சி யில்லாதவர்களுக்கு ஒன்றை வழங் கினால் அவர்களுக்கு அதன் அருமை தெரி யாது. 'தான் தேடாப் பொன்னுக்கு மாற்றும் இல்லை, உரையும் இல்லை' என்பது பழமொழி. ஆகவே அவன் எல்லா உயிர்களுக்கும் இரங்குவதில்லை.

வாளா
இரங்குமோ எவ்வுயிர்க்கும் ?

ஆகவே நம்மிடம் அவனுக்கு இரக்கம் உண்டாகும் வகையில் நாம் முயற்சி பண்ண வேண்டும். அவனைச் சரணடைந்து 'எனக்கு அருள் செய்ய வேண்டும்' என்று பணிந்து இரக்கவேண்டும். ஒருமுறை விண்ணப்பித் தால் போதாது. பலகாலும் அடுத்தடுத்து பணிந்து இரக்க வேண்டும். அப்போது தான் நம்முடைய உண்மையான அன்புப் புலப்படும். பணம் படைத்தவனிடம் வறி யவன் எத்தனை முறை சென்று எப்படி எப்படியெல்லாம் பணிந்து கெஞ்சி வேண்டு கிறான் !

உண்மையான அருட்பசி உடையவர்கள் இறைவனைப் பலகாலும் பணிந்து வழிபட்டு வேண்டுவார்கள்.

"பற்பாவும் வாயாரப் பாடி ஆடிப்
பணிந்தெழுந்து குறைந்தடைந்தார்
பாவம் போக்க கிற்பானை

என்று அப்பர் சுவாமிகள் பாடுவார்.

அவ்வாறு பலகாலம் பணிந்து இரந்தால் இறைவன் திருவுள்ளம் நெகிழ்வான் ; இரங்கு வான்.

பன்னாள் இரந்தாற் பணிந்து.

அவ்வாறு இரங்குவானானால் நமக்குக் கிடைக்கும் நன்மைகளுக்கு அளவே இராது. அவன் நம்மை மிக உயர்ந்த பதவியிலே வைப்பான். இந்திரபதவி, பிரமபதவி, திருமால் பதவி முதலிய உயர்ந்த பதவிகள் கிடைக்கும். எந்தப் பதவியில்தான் அவனால் வைக்க முடியாது ?

"குடங்கை நீரும் பச்சிலையும்
இடுவார்க்கு இமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையும்
தருவாய் மதுரைப் பரமேட்டி"

என்பது திருவிளையாடற் புராணம். தன்னை அபிடேகம் செய்து அருச்சித்து வழிபடுகிற வர்களுக்குப் பிரம பதவியையும் திருமால் பதவியையும் அவன் தருவான். அவன் நினைத்தால் எதைத்தான் தரமுடியாது ?

இரங்குமேல்
என் ஆக வையான்தான் ?

அவன் இந்த உலகத்தில் நுகரும் சுக போகத்தைத் தருவான். தேவலோகத்தை வழங்குவான் ; அதன் அரசுரிமையையே தந்துவிடுவான். வேறு எந்த உலகமாக இருந்தால் என்ன ? அவன் தரமாட்டானா ?

எவ்வுலகம் ஈந்து அளியான் ?

ஈவதுமட்டும் அன்று ; அப்படி ஈந்த பதவி யில் எந்தப் பகையும் வராமல் நம்மைப் பாதுகாப்பான். "நாம் இவனுக்கு உயர்ந்த பதவியைக் கொடுத்துவிட்டோமே ! இனி இவன் சுகமாக இருக்கட்டும்" என்று சும்மா இருந்துவிட மாட்டான். அந்தப் பதவியில் இடையூறு சிறிதும் வராமல் நம்மைக் காத்து நிற்பான். நமக்கு வேண்டிய உலகத்தை ஈந்து, பிறகு அளப்பான் (பாதுகாப்பான்).

ஆகவே அவன் உள்ளத்தில் இரக்கம் சுரக்கும்படி நாம் பன்னாள் பணிந்து இரக்க வேண்டும். அப்போதுதான் எல்லாம்

கிடைக்கும். ஒரு முயற்சியும் செய்யாமல் இருந்தால் அவன் சும்மா இரங்க மாட்டான்.

**அரங்கமாப் பேய்க்காட்டில் ஆடுவான் வாளா**
**இரங்குமோ எவ்வுயிர்க்கும் ? ஏழாய் ! —**
**இரங்குமேல்**
**என் ஆக வையான்தான் ? எவ்வுலகம்**
**ஈந்தளியான்?**
**பன்னாள் இரந்தாற் பணிந்து.**

**அன்வயம்** : ஏழாய், பேய்க்காட்டில் அரங்கமா ஆடுவான் எவ்வுயிர்க்கும் வாளா இரங்குமோ ? பன்னாள் பணிந்து இரந்தால், இரங்குமேல், தான் என்னாக வையான் ? எவ் வுலகம் ஈந்து அளியான் ?

அறிவற்ற நெஞ்சே, பேய்களை உடையசுடுகாட்டில் அதையே அரங்கமாகக் கொண்டு நடனமிடும் சிவபெருமான் தரா தரம் பாராமல் எல்லா உயிர்களுக்கும் வாளா இரங்குவானோ ? மாட்டான். அவனைப் பல காலம் வணங்கி வழிபட்டு விண்ணப்பித்துக் கொண்டால் இரங்குவான் ; அவ்வாறு இரங்குவானாயின் அவன் நம்மை எந்தப் பதவியிலுள்ளவராகத்தான் வைக்கமாட் டான் ? எந்த உலகத்தைத்தான் வழங்கிக் காப்பாற்ற மாட்டான் ?

[அரங்கம்—நடனமாடும் இடம். பேய்க் காடு—பேய்களை உடைய சுடுகாடு. ஆடு வான் என்பதால் சிவபெருமான் என்பது புலப்பட்டது. வாளா—தராதரம் பாராமல், சும்மா. இரங்குமோ ; வினா எதிர்மறைப் பொருளில் வந்தது ; இரங்கான் என்னும் பொருளைத் தந்தது. எவ்வுயிர்க்கும் — பல தரப்பட்ட பக்குவங்களையுடைய எல்லா உயிர்களுக்கும். ஏழாய் : நெஞ்சை விளித்துச் சொன்னது. ஏழையாக உள்ள உனக்கு எல்லாப் போகமும் கிடைக்கும் என்று நயம்படச் சொன்னபடி.

'பணிந்தால் இரங்குவான் ; இரங்கினும் இவற்றையெல்லாம் வழங்குவான்' என்றார். என் ஆக—எந்த நிலையில் இருப்பவராக. தான்—அவன். என்னாகத்தான் வையான், எவ்வுலகந்தான் அளியான் என்று இரண் டிடத்திலும் கூட்டிப் பொருள் செய்வதும் பொருந்தும். ஈதலும் அளித்தலும் வேறு வேறு செயல் ; ஈதல் வழங்குவதைக் குறித் தது ; அளித்தல் பாதுகாப்பதைக் குறித்தது.

விலை உயர்ந்த பொருளைக் குழந்தையிடம் அளித்த அன்னை அதுபறிபோகாமல் அந்தக் குழந்தையின்பால் ஒரு கண் வைத்துக் காவல் செய்வது போன்றது இது. பன்னாள் நான் என்றது தினத்தைக் குறியாமல் காலம் என்னும் பொதுப் பொருளைக் குறித்தது.

"பல்லூழி காலம் பயின்றரனை
அர்ச்சிக்கின்
நல்லறிவு சற்றே நகும்"

என்பராதலின் பலகாலம் செய்யும் முயற்சி யினால்தான் மேலான பயன் கிடைக்கும் என்று குறிப்பித்தார்.

இறைவனை இடைவிடாது பணிந்து வழி பட்டால் எல்லா வகையான பதவிகளும் கிடைக்கும் என்பது கருத்து.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 78-ஆவது பாடல் இது.






# பலனை வேண்டாதவன் விருப்பம்

சரஸ்வதி

ஹிரண்யகசிபு தன் மகனை பிரகலாதனைக் கொல்லும் முயற்சியில் தானே ஈடுபட்டான். மிகவும் கோபத்துடன் எதிரிலிருந்த தூணில் ஒரு குத்து விட்டான். கம்பம் பிளந்தது. நரசிம்மமூர்த்தி வெளிப் பட்டார். ஹிரண்யகசிபுவைத் தம் மடிமீது போட்டுக்கொண்டு தமது கூரிய நகங்களினால் அவன் வயிற்றைக் கிழித்தார். அரக்க அரசனை ஹிரண்யனின் ஆட்கள் பயந்து ஓட்டமாக ஓடிவிட்டனர்.

ஹிரண்யனைக் கொன்று அவனது குடலை மாலையாக அணிந்து கொண்டார். நரசிம்மமூர்த்தியான பகவான் நாக்கை அடிக்கடி வெளியே நீட்டிக்கொண்டு கர்ஜனை செய்துகொண்டே ஹிரண்யக் கசிபுவின் சிம்மாசனத்தில் ஏறியமர்ந்தார். கண்கள் அனலைப் போல் ஜொலித்துக் கொண்டிருந்தன. அவரது கோபம் ஹிரண்யனைக் கொன்ற பிறகும் சாந்தியடையவில்லை.

தேவர்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. சிவ பெருமானையும் பிரம்மதேவனையும் அழைத்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தனர். ஒவ்வொருவரும் தனித்தனியாக நரசிம்மமூர்த்தியைத் துதித்தனர். அதனால் எந்தவிதப் பயனும் ஏற்படவில்லை. 'இவ்விதம் நரசிம்மமூர்த்தியின் கோபம் தணியாமலே இருந்துவிட்டால் என்ன என்ன விபரீதங்கள் விளையுமோ!' என்று உள்ளூரப் பிரம்மாவே பயந்து கொண்டிருந்தார்.

எனவே அவர்கள் அனைவரும் மகாலட்சுமியை அழைத்து நரசிம்ம மூர்த்தியிடம் போகச் சொன்னார்கள். மகாலட்சுமி மகாவிஷ்ணுவின் கோர உருவத்தைப் பார்த்தவுடனே திரும்பி வந்துவிட்டாள். திரும்பி வந்ததுமல்லாமல் தேவர்களை நோக்கி, "உங்கள் இஷ்டதெய்வத்தின் இவ்வளவு பயங்கரமான தோற்றத்தை இதுவரை நான் பார்த்ததே கிடையாது! என்னால் அவருடைய அருகில்கூடச் செல்ல முடியாது!" என்று கண்டிப்பாகக் கூறிவிட்டாள். முடிவில் பிரம்மா பிரகலாதனை அழைத்து, "குழந்தாய்! நீ நரசிம்மமூர்த்தியின் அருகே சென்று அவரை சாந்தப்படுத்து" என்றார்.

பிரகலாதனுக்கு ஏது பயம்? அவனுக்குத்தான் அது என்னவென்றே தெரியாதே! அவன் சாதாரணமாக நடந்து, பகவானின் அருகில் சென்று, அவரெதிரே சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தபடி, தரையில் படுத்துக் கொண்டுவிட்டான்.

பகவான் நரசிம்மரே அவனைத் தூக்கி எடுத்துத் தம் மடிமீது இருத்திக் கொண்டார். அன்பு அதிகமாகவே நாக்கால் பிரகலாதனின் தலையை நக்க ஆரம்பித்தார். மூவுலகிற்கும் அதிபதியான பகவான் பிரகலாதனைப் பார்த்து, "குழந்தாய்! என்னை மன்னித்து விடு. நான் வருவதற்கு மிகவும் தாமதமாகிவிட்டது. அதனால் நீ எவ்வளவு துன்பப் பட நேர்ந்தது!" என்றார்.

பிரகலாதன் பகவானின் மடியிலிருந்து இறங்கினான். மிகவும் பக்தி சிரத்தையுடன் இரு கைகளையும் கூப்பிக்கொண்டு குரல் தழுதழுக்கப் பகவானைத் தொழுதான்.

**பகவான்:** பிரகலாதா! உன் பக்தி மிகவும் அபாரமானது. உனக்கு விருப்பமான வரம் கேள்; தருகிறேன்.

**பிரகலாதன்:** பிரபுவே! தாங்கள் என்ன சொல்கிறீர்கள்? எவன் தன் யஜமானனிடம் ஏதாவது ஒன்றைப் பெறுவதற்காகத் தொண்டு செய்கிறானோ அவன் தொண்டனே அல்ல. தாங்கள் என்னை உய்விக்க வந்த யஜமானர். நான் உங்களைச் சரணடைந்த சேவகன். அப்படி நீங்கள் எனக்கு ஏதாவது வரம் தரவேண்டும் என்று கண்டிப்பாக விரும்பினால் என் மனதில் எந்த விதமான ஆசையும் இல்லாதபடி செய்துவிடுங்கள்.

பகவானுக்கோ எல்லாம் தெரியும். இருப்பினும், "நீ விரும்பியபடியே ஆகட்டும்" என்று கூறிவிட்டுப் பின்னரும், "பிரகலாதா! ஏதாவது கேள்" என்றார்.

பிரகலாதன் சிறிது சிந்தித்தான். 'இவ்வளவு தூரம் கடவுள் என்னிடம் கூறுகிறார் என்றால் நிச்சயமாக என் மனதில் ஏதாவது விருப்பம் இருக்கத்தான் வேண்டும்' என்று எண்ணியபடி, முடிவில் பகவானிடம், "பிரபுவே! என் தந்தை தங்களை மோசமான முறையில் நிந்தித்துவிட்டார். உங்கள் தொண்டனான என்னை மிகவும் கொடுமைப்படுத்திவிட்டார். அவர் செய்த பாவங்களை நீக்கி அவரைப் புனிதப்படுத்திவிடுங்கள். இதுவே என் வேண்டுகோள்" என்றான்.

நரசிம்மமூர்த்தியான பகவான் சிரித்துக்கொண்டே, "பிரகலாதா! உன்னைப் போன்ற பக்தனைப் பெற்ற தகப்பன் தன்னாலேயே புனிதத் தன்மை அடைந்துவிடுவான். உன்னைப் போன்ற என் பக்தன் எந்தக் குலத்தில் தோன்றுகிறானோ அந்தக் குலத்தில் இருபத்தொரு தலைமுறையினர் கடைத்தேறிவிடுகிறார்கள்" என்றார்.

தனக்குத் தீங்கிழைத்தவர்களுக்கும் எவ்விதக் கஷ்டமும் ஏற்படக் கூடாது என்பதுதான் பிரகலாதனின் மனதிலிருந்த ஆசை. உண்மையான கடவுள்பக்தனிடம் இதைவிட வேறு என்ன ஆசை தனக்கென்று இருக்கப்போகிறது?

— ஸ்ரீமத் பாகவதம்



# சைவ சித்தாந்தத்தில் முக்தி பற்றிய கருத்து

ராஜம் ஜயராமன்

முக்தி என்பது விடுதல் எனப் பொருள் படும். எதனை விடுதல் வேண்டும்? பாசத்தை விடுதல். இதை எவ்வாறு விடுதல் வேண்டும் எனில், சிவத்தைப் பற்றி நின்றே பாசத்தை விடவேண்டும். இதுவே முக்தி என்பதாகும்.

இந்த முக்தியில் ஆன்மாவின் நிலை எத் தகையது? சைவ சித்தாந்தம் முக்தி பற்றிக் கூறும் கருத்து யாது? இவை பற்றி ஒரளவு ஆராய முயலுவதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

சைவ சித்தாந்தம் என்பது தென்னுட்டில் தமிழ் பேசும் மக்களிடையே காணும் சைவ தத்துவ முறைக்குப் பெயராகும்.

''வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்'' என்கிருர் உமாபதிதேவ நாயனுர். ''சைவ சித்தாந்தம் இந்தியச் சிந்தனை, உணர்வு ஆகியவற்றின் சிகரம்'' என்று சிறப் பித்துக் கூறுகிருர் கௌடி என்பவர்.

சைவ சித்தாந்திகள் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் பற்றிச் சிறப்பாகப் பேசுவர்.

இந்தச் சமயவாதிகள் கூற்றுப்படி இறை, உயிர், உலகம் ஆகிய மூன்றும் என்றும் உள்ள பொருள்கள்.

எனவே சித்தாந்தம் பன்மைக் கொள்கை வாய்ந்த உண்மை நெறியாகும்.

இவர்கள் வேதங்களைப் பொதுப் பிரமாண மாகவும் ஆகமங்களைச் சிறப்புப் பிரமாண மாகவும் கொள்வர்.

சித்தாந்திகள் முதலில் பிறருடைய மாறு பட்ட கருத்துக்களைக் கூறி, அது எவ்விதம் பொருந்தாது என்பதை விளக்கிவிட்டுப் பிறகே தம்முடைய கருத்துக்குச் செல்கின் றனர்.

இறை–ஆன்மா, மலம்-மாயை, வினை–முக்தி இவை பற்றி இவர்களது ஆராய்ச்சி ஆன்மிகத் துறையில் செல்பவர்களுக்கு ஓர் நல்விருந்தாகும்.

இவர்கள் தங்கள் கருத்து எதையும் தங்கள் விருப்பப்படியோ, மனம்போன போக்கிலோ விளக்கம் கூருமல் ஒவ்வொரு கொள்கையை யும் சுருதி, யுக்தி, அனுபவம் என்ற பிர மாணங்கள் மூலமே ஆராய்ந்து நிலைநாட்டு கின்றனர்.

இவர்கள் பிறர் கருத்தைப் பற்றிப் பேசு வதைப் 'பரபக்கம்' என்றும், தங்களுடைய கருத்துக்களைச் 'சுபக்கம்' என்றும் கூறுவர்.

## ஆன்மாவின் இயல்பும் அதன் இலட்சியமும்

ஆன்மாக்கள் எண்ணிறந்தவை, நித்ய மானவை, ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடப்பவை என்பதே சித்தாந்திகளின் கொள்கை இதை உமாபதி சிவாசாரியார், ''எண்ணரிதாய், நித்யமாய், இருள் மலத்தில் அழுந்தி'' என்றே ஆன்மாவின் உண்மை நிலை பற்றிப் பேச ஆரம்பிக்கிருர்.

அடுத்து, ஆன்மாவின் இயல்பு யாதெனில் அது எப்போதும் தனித்து நிற்பதில்லை. அது எதைச் சாருகிறதோ அதன் மயமாக, ஆகி

விடுகிறது. எந்த நிலையிலும் ஏதேனும் ஒன்றை அனுபவித்துக் கிடத்தலே அதன் இயல்பாகிறது.

ஆன்மா மும்மலங்களால் தளைப்பட்டுக் கிடக்கிறது. அவற்றை நீக்கி முக்திப் பேற்றை அடைய முனையும்போது, அந்த மலங்களால் காரியப்பட்டுப் பல்வேறு நிலையை அடைகிறது. இதை அவத்தை என்று கூறுவர். இது கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை (கேவல நிலை, சகலநிலை, அதீதநிலை) எனப்படும்.

இவ்வாறு பல அவத்தைகளை அடையும் ஆன்மா, முக்தி மார்க்கங்களான சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மார்க்கங்களில் சென்று, திருவருளின் துணையால் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் அடைந்து, குருவின் அருளால் ஞானதீக்கை பெற்று, யான் எனது என்னும் செருக்கற்று, இறைவனுடன் இரண்டறக் கலக்கும் 'சுத்தாத்வித முக்தி'யை அடைகிறது என்பதே சித்தாந்திகளின் கருத்தாகும்.

முக்திப் பேறடையாத ஆன்மா எதுவும் இல்லை; ஆனால் முக்திப் பேறடையும் கால அளவுகள் அந்தந்த ஆன்மாவின் பரிபாக நிலைக்கேற்ப வித்தியாசப்படும்.

இனி, ஆன்மா தளைப்பட்ட நிலையில் ஆணவத்தைச் சார்ந்து செயற்படுவதிலிருந்து முக்திநிலையில் தளை நீங்கிய நிலையில் இறைவனைச் சார்ந்து செயற்படும் வரை ஆன்மாவுக்கு ஏற்படும் நிலைகளை (அவத்தைகளை) ஓரளவு பார்ப்போம்.

பொதுவாக மலங்கள் மூன்று என்றே கூறுவர். ஆனால் அவற்றை ஆராய்ந்து பார்த்தால் ஐந்து என்பது விளங்கும். "மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற்பொருமத்துறவே" என்ற மணிவாசகர் கூற்றிலிருந்தும் இதை அறியலாம்.

ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என மலம் ஐந்தாகும்.

ஆன்மா என்று உளதோ அன்றே அதனோடு உள்ளது ஆணவமலம். சித்துப் பொருளான ஆன்மாவைச் சரிக்குச் சரியாக மறைத்து அநாதி முதலே கறந்துள்ளதனால் இதைச் சகலமலம் என்பர்.

ஆணவம் உயிருடன் கலந்து நின்று அறிவு, இச்சை, தொழில்களைத் தடுப்பதனால் இதைப் பிரதிபந்தம் என்கின்றனர்.

ஆணவமலச் சேர்க்கையால் ஆன்மாக்கள் புரியும் வினைகளின் தொகுதியே கன்மமலம். இது உயிர் செல்லும் இடமெல்லாம் தொடர்ந்து சென்று, சுகதுக்கங்களைக் கூட்டுவதனால் இதை அனுபந்தம் என்றனர்.

ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களை தன்னிடமிருந்து தோற்றுவிக்கும் உபதானமாக இருப்பதே மாயை எனப்படும். இது உயிரோடு கூடி, உடம்பு முதலிய கருவி கரணங்களாக நிற்பதனால் இதைச் சம்பந்தம் என்கின்றனர்.

மாயையைக் காரியப்படுத்தி மயக்கும் இயல்பை அளிப்பது மாயேயம் ஆகும்.

திரோதாயி என்பது, உயிர்கள் அனுபவிக்கும் பொருள்களின் குணதோஷங்களை மறைக்கும் சக்தியாகும். அவ்வாறு மறைப்புத் தொழில் நிகழாவிட்டால் அனுபவ நிலையில் நன்மை தீமை என்ற உணர்வை அடைய முடியாது. ஆகவே, பொருள்களின் குணமும் தோஷமும் முன்பே தெரிந்துவிடாதபடி மறைக்கும் சக்தியே திரோதான சக்தியாகும்.

ஆணவம் ஆன்மாவுடன் அநாதி முதல் செம்பிற் களிம்பு போல் பற்றி நிற்கிறது. கன்மமும் மாயையும் ஆன்மாவுக்கு ஆணவ மல நீக்கத்தின் பொருட்டு இறைவனால் கூட்டப்படுகிறது.

மாயையும் கன்மத்தையும் காரியபடுத்தும் தொழிற்சக்தியாக மாயேயமும் திரோதாயியும் செயலாற்றுகின்றன.

இவ்வாறு ஆன்மாவைக் கொள்ளிவட்டம் போல் சூழ்ந்தும், காற்றுடியைப் போலப் பிறப்பு இறப்பில் சுழல வைக்கும் ஐந்து மலங்களும் நீங்கினாலன்றி, ஆன்மாவுக்கு முக்தி நிலை கிட்டாது.

இந்த மலவாதனையைப் போக்கி, 'சக்தி நிபாதம்' என்ற அருள் எல்லைக்குள் வரும் வரை ஆன்மா படும் அவத்தைகளிலிருந்து இறைவன் எவ்வாறு ஒன்ருயும் வேருயும் உடனுயும் இருந்து உதவி புரிகிருன் என்று பார்ப்போம்.

அவத்தைகள்

ஆன்மா 'கருவறையில் அறிவிலாக் குழவியைப் போல், ஆணவமலத்தால் மறைப்புண்டு, அறிவு இருந்தும் அறியாமையுள் அமிழ்ந்து கிடக்கும் நிலையே கேவல நிலை (கேவலாவத்தை) என்பர்.

இந்தக் கேவல நிலையில் ஏதும் செயலற்றுக் கல்லைப் போலக் கிடக்கும் ஆன்மாவின்மீது இரக்கம் கொண்டு, இறைவன் தனது திருவருளைப் பாய்ச்சுகிருன்.

இந்தத் திருவருள் இரண்டு வகையில் செயல்படுகிறது. ஒரு பகுதி, ஆன்மா நலம் பெறும்பொருட்டுப் பலவித அனுபவங்களை ஆன்மாவுக்கு ஏற்படச் செய்து, உண்மை இன்னதுதான் என உணரச் செய்கிறது. மற்ருெரு பகுதி, உண்மை உணரப்பெற்ற ஆன்மாவுக்குப் 'பதிஞானம்' ஊட்டி ஆன்ம அறிவை விஸ்தரிக்கச் செய்கிறது.

இந்த இரண்டு சக்திகளை ஆதிசக்தி, சிற்சக்தி என்று கூறுவர்.

இனி, கேவல நிலையில் உள்ள ஆன்மா எவ்வாறு சகலநிலைக்கு வருகிறது என்று பார்ப்போம்.

ஆன்மாவைப் பற்றியிருக்கும் ஆணவமலத்தின் வன்மை மென்மைகளுக்கு ஏற்ப, கேவல நிலையில் மூலகன்மம் ஏற்படுகிறது. இந்த மூலகன்மம் சூக்குமமான விருப்பு வெறுப்புக்களால் ஆகாமிய கன்மத்தைத் தோற்றுவிக்கிறது. இந்த ஆகாமியம் சஞ்சிதமாகிறது. இதிலிருந்து பிராரப்தம் முகந்து தூல உடம்பு ஏற்பட ஏதுவாகிறது.

ஆகவே, தூல உடம்பு ஏற்படும் காலத்தில் 'பிராரப்தம்' என்னும் பெயரால் தத்தம் வினைகளுக்கு ஏற்றவாறு உடலைப் பெற்று ஆன்மா இயங்குகிறது.

பின்பு மாயையாலாகிய கருவி கரணங்களோடு கூட்டப்பெற்று, சந்திரகலை போல அறிவு வளர்ச்சியுற்றுத் தொழிற்படுகிறது. இந்நிலையே சகலநிலை (சகலாவத்தை) எனப்படுகிறது. இந்தச் சகலநிலையே நாம் அனைவரும் இப்போது கொண்டுள்ள நிலையாகும்.

இந்த நிலையில், மாயையானது மாயேயமாகக் காரியப்பட்டு, உயிர்கள் தத்தம் கன்மங்களைப் புசிப்பதற்கு அனுகூலம் செய்கிறது. கேவல நிலையில் தொழிற்படாதிருந்த அறிவு, சகலநிலையில் ஏகதேச அறிவாகவும் சிற்றறிவாகவும் விளக்கமுறுகிறது. இது காரணமாக உயிர்கள் இருவினைகள் புரிந்து, கன்மத்தின் சுழலில் சிக்கி, வினைஈட்டுதலும் வினை அனுபவமும் நிகழ்த்திக்கொண்டே இருக்கின்றன.

'இவ்வாறு நிகழ்ந்துகொண்டே இருந்தால், பின் எப்போது உயிர்கள் வினையொழிந்து கன்மத்தின் கடும் பிடியிலிருந்து விடுதலை பெறும் ?' என்று பார்ப்போம்

இறைவன் திருவருளால் சிற்சக்தி ஓர் அவதாரமாக, திரோதாயி என்னும் பெயர் தாங்கி, மறைப்புத் தொழிலைப் புரிகிறது.

இந்தச் சக்தி, ஆன்மாக்களைப் புண்ணிய பாவங்களைச் செய்ய வைத்துப் பிரபஞ்சத்தை உண்மைப் பொருளென விபரீதமாக எண்ணச் செய்து, பிறகு அனுபவபூர்வமாக மனைவி செல்வம் போன்ற பற்றுக்களை விட்டு குருவைத் தேடி, இறைவனின் திருவடியை அடையவேண்டும் என்ற நாட்டத்தை ஏற்படுத்தும் வரையில் மறைப்புச் சக்தியாக இருந்து திரோதாயியே தொழிற்படுகிறது.

பின்பு இந்த மறைப்புச் சக்தியே 'அருட் சக்தி'யாக மாறிச் சுத்தநிலை அடைய உதவி புரிகிறது.

சகல நிலையில் உள்ள ஆன்மாவுக்கு மெய்யறிவு தோன்றப்பெற்று, இரு வினையொப்பு, மலபரிபாகம் அடைந்து, பின்பு சக்தி நிபாதம் என்ற திருவருள் வீழ்ச்சியும், குருவருளும் ஏற்படும். குருவின் தீக்கையால் பசுஞானமும் பாசஞானமும் நீங்கிப் பதிஞானம் பெற்றுத் தன் நிலையையும் இறை

நிலையையும் அறியும். இதுவே சுத்தநிலை (சுத்தாவத்தை) அல்லது முக்தி நிலை என்ப தாகும்.

இத்தகைய சுத்த நிலையை அடைவதற்குச் சைவ சித்தாந்தம் நான்குவித மார்க்கங்களைக் கூறுகிறது. அவை— சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாம். இவற்றை முறையே தாச மார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன் மார்க்கம் எனவும் குறிப் பிடுவர். இந்த நெறிகளை மேற்கொண் டொழுகிய ஆன்மாக்கள் சாலோக, சாமீப சாருப, சாயுச்சிய பதவிகளை அடையும். முதல் மூன்று பதவிகளும் பதமுக்தி நிலையாகும். நான்காவதாகிய ஞானத்தால் அடையும் முக்தியே பரமுக்தியாகும்.

தாயுமானவர் இந்த நால்வகை மார்க்கங்களை யும் அரும்பு, மலர், காய், கனி இவற்றிற்கு ஒப்பிட்டு—

விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு மலர் காய் கனி போல் அன்றே பராபரமே

என்கிறார். இவற்றை விளக்கும் முறையாகிய அட்டவணை :—

| நான்கு வகை மார்க்கங்கள் | | பதவி | அடையும் நிலை | உவமை |
|---|---|---|---|---|
| சரியை | தாஸ மார்க்கம் | சாலோகம் | பத முக்தி | அரும்பு |
| கிரியை | சற்புத்திர மார்க்கம் | சாமீபம் | பத முக்தி | மலர் |
| யோகம் | சக மார்க்கம் | சாருபம் | பத முக்தி | காய் |
| ஞானம் | சன்மார்க்கம் | சாயுச்சியம் | பர முக்தி | கனி |

இனி, முக்தியின் வகை பற்றியும், முக்தி நிலையில் ஆன்மா எவ்வாறு செயற்படுகிறது என்பதையும், அது தன்னை இறைவனின் ஒரு பகுதியாகவோ, அடிமையாகவோ உணருகிறதா அல்லது இறைவனோடு இரண் டறக் கலந்து விடுகிறதா என்பது பற்றியும் சித்தாந்திகளின் கருத்து மற்றவர்களின் கருத் திலிருந்து எவ்விதம் மாறுபடுகிறது என்பது பற்றியும் ஓரளவு தெரிந்துகொள்வோம்.

முக்தி நிலை பற்றி சமயவாதிகள் பலரும் பலவிதமாகக் கூறுகின்றனர். இவை அனைத்தும் குற்றங்களையுடைய முக்தி என்று மறுத்து, அவை எவ்விதம் பொருந்தா என்பதை எடுத்துக்காட்டிச் சித்தாந்தத்தின் ‘சுத்த அத்வைத முக்தி’யை மிகத் தெளிவு பட, சிவப் பிரகாசத்தில் உமாபதி சிவாசாரி யார் நிலைநாட்டுகிறார்.

‘மகளிரிடத்தில் பெறப்படும் போகமே முக்தி’ என்று உலகாயதனும், ‘பஞ்ச கந்தங் களும் (உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம்) கெடுவதே முக்தி’ என்று புத்தரில் சௌத்திராந்திகனனும், ‘திரிகுணங் கள் கெடுவதே முக்தி’ என்று அமணர்களும், ‘கன்மம் கெடுவதே முக்தி’ என்று பிரபா கரனும், ‘மலங்கள் கெடுவதே முக்தி’ என்று பேதவாதியும், ‘ஆணவமலம் கெடுவதே முக்தி’ என்று அகச்சமயத்தில் சிவசம வாதி யும், ‘ஆன்மாவுக்கு விவேகம் உண்டாவதே முக்தி’ என்று மாயாவதியும், ‘ஆன்மா கெடு வதே முக்தி’ என்று பாற்கரியனும், ‘ஆன்மா பசுகரணம் கெட்டுச் சிவகரணமாவதே முக்தி’ என்று சங்கிராந்த வாதியும், ‘ஆன்மா இன்பதுன்பம் ஏதுமின்றிக் கல்லைப் போல் இருக்கும் நிலையே முக்தி’ என்று பாடண வாதியும் ஆக இப்படிக் கூறும் பத்து வகை முக்தியையும் மறுத்து, இவை அனைத்தும் குற்றங்களையுடைய முக்தி என்று சுட்டிக் காட்டி இவற்றைப் பழிசேர் முக்தி என்கிறார் உமாபதி சிவாசாரியார்.

இவை அனைத்தையும் மறுக்கும் சித்தாந்தி கள் பின்பு எதுதான் ‘அத்துவித முக்தி’ என்கின்றனர் என்பதையும், அவர்கள் கொடுக்கும் விளக்கத்தையும் பார்ப்போம்.

முக்தியில் இறைவன் காட்டுதல் – காணுதல் என்ற இரண்டு உபகாரங்களைப் புரிவதனால் ஆன்மா கலத்தலும் துய்த்தலும் கொள்ள

முடிகிறது. இறைவனேடு இரண்டறக் கலந்தபோதும், இறைவன் தன்மையைத் தனது தன்மையாகக் கருதுகிறதே ஒழிய, தன்னை இறைவனுக எண்ணுவதில்லை. மேலும், சிவம் முற்றறிவும் முற்றுத் தொழிலும் உடையது. ஆன்மா சிற்றறிவும் சிறுதொழிலும் உடையது. இவ்வாறு வெவ் வேறு அறிவையும் தொழிலையும் உடையன வாயினும் பிரிக்க முடியாதபடி கலந்து நிற்ற லால் இதுவே 'சுத்தாத்வைத முக்தி' என்று சித்தாநத சைவம் சிறப்பாகப் பேசும் முக்தி நிலையாம்.

இவ்வாறு ஆன்மாவும் இறைவனும் கலப்பில் பிரிக்கக்கூடாத ஒன்ருயும், பொருள் தன்மையில் வேருயும் இருக்கும் நிலையை ஓர் உதாரணத்தின் மூலம் விளக்குவர்.

நெற்றியில் குத்தும் பச்சைப்பொட்டு பிரிக்க முடியாத கலப்பில் ஒன்ருகவும், பொருட் தன்மையில் வேருகவும் இருப்பது போன்ற உறவாகும் இது. இதை மேலும் ஓர் உதாரணம் மூலம் விளக்குவர்.

'தாடலை' என்னும் ஒரே சொல் தாள் + தலை என்ற இரண்டு சொற்களால் ஆனது. இவ்விரு சொற்களும் வெவ்வேறு பொருளைக் குறித்துத் தனித்தியங்கும் தன்மையன. ஆயினும் இவை இணையும்பொழுது, ஒரே சொல்லாகத் 'தாடலை' என்று ஆகிறது. 'தலை' ஆன்மாவையும், 'தாள்' இறைவனையும் குறிப்பனவாகக் கொண்டு, இறைவனது திரு வடியில் ஆன்மாவின் தலை பொருந்துகிறது என்பதே சிவப்பிரகாசத்தில் உமாபதி சிவாசாரியார் கூறுகிருர்.

இது போன்று மற்றுமோர் உதாரணத்தை அருள் நந்தி சிவாசாரியார், "ஒன்ருகாமல் இரண்டாகாமல், ஒன்று மிரண்டுமின் ருகாமல்" என்று இருபஃதில் கூறியிருப் பதைக் காணலாம்.

இது வரையில் சுத்தாத்வைத முக்திப் பற்றிப் பார்த்தோம்.

முக்தி நிலையில் சீவன்முக்தி, அதிகாரமுக்தி, போகமுக்தி, இலயமுக்தி, பரமுக்தி என ஐந்து வகை உண்டு.

சீவன்முக்திக்கு மேற்பட்டது அதிகார முக்திநிலை. அதற்கு மேற்பட்டது போக முக்தி நிலை. இதற்கு மேற்பட்டது இலய முக்தி நிலை. எல்லாவற்றிற்கும் மேலானது பரமுக்தி நிலை. இதுவே சுத்தாத்வைத முக்தி நிலை என்று சித்தாந்திகள் கூறு கின்றனர். மற்ற நான்கும் முக்திப் பேற்றுக்கு நெருக்கமான பதமுக்தியே யன்றி, உண்மை முக்தி பதம் அன்று என்பதே அவர்கள் கொள்கை.

இனி, பத முக்தியான சீவன் முக்தி பற்றிப் பார்ப்போம். 'சீவன் முக்தி' என்பது உட லோடு நின்று, பாசத்தை விடுதலாகும். அதாவது—நம்மைச் சீவத் தன்மை படுத்து கிற பாசத்தை இழந்து நிற்றலாகும். இவர் களை அணைந்தோர், அடியார் என்று அழைப்பர். இவர்கள் எப்போதும் சிவ யோகத்தில் நின்று, சிவஞானத்தைப் பெற்று, அதனேடுகூட, அனுபவிக்கும்போது, பிர பஞ்ச வாதனை மேலிட்டாலும் அதில் மயங் காமல், அவை தோன்றிய மாத்திரத்திலேயே 'பஞ்சசுத்தி' மூலம் அவற்றை நீக்கிக் கொண்டு ஞானநிலை குலையாமல், சிவயோகி யாய்ப் பேரின்பத்தையே நுகர்ந்துகொண் டிருப்பர். இவர்களுக்கு உள்ளும் புறமும் சிவபெருமானே காட்சியளிப்பர். எப் பொருளிலும் மெய்ப்பொருளையே காண்பர். இந்தத் தவநிலையை 'மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள்' எனத் தொழுது வென்ற மெய்ப்பொருள் நாயனுர் மூலம் விளங்கிக் கொள்ளலாம்.

இவர்களின் செயல் அனைத்தும் உலக மக்களின் நல்வாழ்விற்கும் நற்கதிக்குமே துணையாக அமையும். மாந்தர் படும் துயர் கண்டு இவர்கள் பேரிரக்கம் கொள்வர். இதை, 'வையகம் முற்றும் துயர் தீர்க்கவே' என்ற தேவாரத் திருப்பாட்டால் உணர லாம்.

இவர்கள் உட்பூசை, புறப்பூசை இரண் டினையும் விட்டுச் சிவஞானம் ஒன்றையே பற்றி நிற்பர். உறங்குபவரின் கையிலுள்ள பொருள் எவ்வாறு அவர்களின் பிடியிலிருந்து அவர்கள் அறியாமலே தானே நழுவி விடுகிறதோ அதுபோல் இவர்கள் செய்து

வந்த நியமங்கள் அனைத்தும் தாமாகவே நழுவி விடும் என்று உமாபதிதேவ நாயனர் கூறுகிருர்.

இவ்வாறு பதமுக்தர்களாக வாழ்ந்து, அது முடியும் நிலையில் இறைவனின் சன்னிதியில் இடம் பெற்றுப் பரமுக்தர்களாக நித்திய வாழ்வு எய்துவர். மாணிக்கவாசகர், நாவுக்கரசர் போன்ருேர் இத்தகைய முக்தி நிலையை அடைந்தோரேயாவர் என்பர்.

முக்தியடைந்த ஆன்மாவின் நிலைப்பற்றிப் பல சமயத்தினரும் பலவிதமான கருத்தைக் கூறியபோதிலும் முக்தி அடைதலே ஆன்மாவின் மிகவும் உயர்ந்த இலட்சியம் என்பதில் யாவர்க்கும் ஐயமில்லை.

ஆகவே, ஆன்மா வேறு, அழியக்கூடிய இந்த உடல் வேறு. கிடைத்தற்கரிய இந்த மானிடப் பிறவியும், இந்தப் பிரபஞ்ச வாழ்வும் முக்தி நோக்கிச் செல்லும் ஆன்மாவுக்கு இறைவன் அளித்த வரப்பிரசாதம் என உணர்ந்து, அதன் பயணம் தடைப்படாமல் காத்து, அதற்கு உறுதுணையாக நமது சமயக் கோட்பாடுகளை நன்முறையில் உணர்ந்து நல்லறிவு பெற்று, நாம் அனைவரும் 'பூரண நிலை' அடைய இறையருளை வேண்டி நிற்போம். 

# மகாவீரரின் அறிவுரைகள்

1. எவ்வுயிரிடத்தும் அன்பாய் இரு. அன்பே உயிரின் இயல்பு. எல்லாரிடத்திலும் அன்புடன் பழகு. நீயும் வாழ்; பிறரையும் வாழவிடு. இதுவே அஹிம்சையின் தத்துவம்.

2. ஜீவகாருண்யமே நல்லொழுக்கத்தின் அடிப்படை.

3. ஒரு மனிதனுடைய வாழ்வு இன்பமாகவோ துன்பமாகவோ இருப்பதற்கு அவனே காரணம் அன்றிப் பிறர் இல்லை.

4. தான் செய்த வினை காரணமாக, எந்த ஓர் ஆன்மாவும் விலங்காகவோ மனிதனாகவோ தேவனாகவோ நாகனாகவோ பிறவி எடுக்கிறது.

5. அடக்கமாக வாழ்பவன் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் பெறுகிருன்.

6. தாம் தாம் செய்த வினைகளின் பயன் தாம் அனுபவிக்க வேண்டுமேயன்றிப் பிறர் அனுபவிக்க முடியாது; மனைவி மக்கள், உற்ருர் உறவினர் சுற்றத்தார் யாராலும் இயலாது.

7. வித்திலிருந்து மரமும், மரத்திலிருந்து வித்தும் உண்டாவதைப் போல, இச்சையிலிருந்து மாயையும், மாயையிலிருந்து இச்சையும் உண்டாகின்றன.

8. அடக்கத்துடன் வாழும் இல்லறத்தார், அடக்கம் இல்லாமல் வாழும் துறவியைவிட மேலானவர்.

9. வெறும் வெளிவேடத்தில் பயன் இல்லை. தலையை மழித்துக் கொள்வதனுல் ஒருவன் சிரமணன் ஆகமாட்டான். வேத பாராயணம் செய்வதனுல் மட்டும் ஒருவன் பிராம்மணன் ஆக மாட்டான். வனத்தில் வசிப்பதனுல் மட்டும் ஒருவன் முனியாக முடியாது. மரவுரி உடுத்துக்கொண்டு, கையில் தர்ப்பையை வைத்திருப்பதனுல் மட்டும் ஒருவன் தவசியாகிவிட முடியாது. பரிசுத்த உள்ளத்தாலும் பற்றற்ற நடத்தையாலுமே ஒருவன் உத்தம மனிதன் ஆகிருன்.

10. மூட நம்பிக்கை அறிவுக்கு முட்டுக் கட்டை.

11. கைலைமலையளவு திரண்ட செல்வத்தையும் வெள்ளியையும் பொன்னையும் மணிகளையும் பெற்றபோதிலும் பேராசைக்காரனுக்குத் திருப்தி ஏற்படாது.

12. சான்ருேரைப் புகழ்வதனுல் மட்டும் வெறும் சான்ருேன் ஆக முடியாது. சான்ருேரின் வாழ்வை அறிந்து அவர்கள் சென்ற நெறியிலே ஒருவன் செல்லும்போதுதான் அவன் சான்ருேர் நிலையை அடைகிருன்.



# ஜபம், தியானம், பிரார்த்தனை

சுவாமி விஞ்ஞானனந்தரின் போதனைகள்

ஆன்மிக வாழ்வில் ஈடுபவர்களுக்குத் தீட்சை பெறுவது என்பது மிகமிக முக்கியமா என்ற கேள்வி சுவாமி விஞ்ஞானனந்தரிடம் கேட்கப்பட்டபோது, 'ஆமாம். மிகமிக அவசியம்' என்று பதில் கூறினர். அதைத் தொடர்ந்து, தீட்சையில் குரு சொன்னது போல் ஒருவனல் ஜபம் முதலியவற்றைச் செய்ய முடியாமற் போனல் என்ன நடக்கும் என்று கேட்கப்பட்டபோது சுவாமி, "சரி, ஒருவன் ஒரு பொருளை எடுத்துக்கொள்ளு கிருன். அவன் இப்பொழுது பயன்படுத்த வில்லை. என்ருலும் அவனிடம் அந்தப் பொருள் இருக்கிறது. அவன் எப்போது நினைக்கிருனே அப்போது அந்தப் பொருளை அவனல் பயன்படுத்த முடியும். ஆனல் அந்தப் பொருளையே வைத்துக்கொண்டிருக் காதவன் என்ன செய்ய முடியும்? அவன் விரும்பினலும் பயன்படுத்த முடியாதே. அதுபோல் தீட்சை, மந்திரம் பெற்றவன் அதைப் பயன்படுத்தவில்லை என்ருலும் பரவாயில்லை. அது அவனிடம் இருக்கிறது. விரும்பும்போது அல்லது அதற்கு உரிய நேரம் வரும்போது அவன் அதைப் பயன் படுத்திக்கொள்வான்" என்ருர்.

தீட்சையின்போது தரப்படுகின்ற பீஜ மந்திரம் (அடிப்படை மந்திரம்) மிகவும் வலிமையானது. 'ஹரீம்', 'ச்ரீம்', 'க்ரீம்' முதலான பீஜமந்திரங்கள் சந்தேகமே இல்லாமல் மிகுந்த ஆற்றல் உள்ளவை.

நீங்கள் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், அன்னை சாரதா தேவியாரின் பெயர்களை ஜபித்தாலே போதும். அதற்குள்ளேயே, சுவாமி விவேகானந்தர், சுவாமி பிரம்மா னந்தர் மற்றும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சீடர்கள் அனைவருடைய பெயர்களும் அடங்கி யுள்ளன.

பகவான் பெயரை இடைவிடாது கூறிவா. அதனல் மட்டுமே மனம் சாந்தியடையும்.

ஜபம் என்பது பகவான் பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்வதாகும். எப்படிப் பட்ட மனநிலை இருந்தாலும் நீங்கள் தொடர்ந்து ஜபம் செய்ய வேண்டும். மனதி லிருந்து முற்றும் விடுபட்டவராக உங்களை நீங்கள் நினைத்துக்கொள்ளுங்கள். உங்கள் மனதில் மகிழ்ச்சி அல்லது துயரமான உணர்ச்சிகள் அல்லது வேறு எந்தவிதமான உணர்ச்சிகள் பதிவானலும் அவை உங்களை எந்தவிதத்திலும் தாக்குவனவாக இருக்கக் கூடாது. தொடர்ந்து ஜபம் செய்து கொண்டே, உங்கள் காரியங்களைச் செய்து கொண்டே இருக்க வேண்டும்.

ஜபம் செய்யும்போது நீங்கள் எந்த விதமாகவும் அமர்ந்திருக்கலாம். காலை மடக்கி அமர்ந்திருக்கலாம். நாற்காலியில் உட்கார்ந்தபடி கால்களைத் தொங்கப் போட்டுக்கொண்டும் இருக்கலாம். அல்லது வேறு எப்படியும் உட்கார்ந்திருக்கலாம்.

எப்பொழுதெல்லாம் நினைக்கிறீர்களோ அப்பொழுதெல்லாம் நீங்கள் ஜபம் செய்ய லாம். எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் நீங்கள் ஜபம் செய்யலாம். ஆனல் தொந்திர

வில்லாத அமைதியான இடத்தில் நீங்கள் ஜபம் செய்வது உங்களுக்கு வெகு சீக்கிரத்தில் இனிமையான ஆன்மிக இன்பத்தைக் கொடுக்கும். நேரத்தைப்பற்றி ஏன் நீங்கள் கவலைப்படுகிறீர்கள்? நடுத்தெருவில் உட்கார்ந்துகொண்டுகூட நீங்கள் அவர் பெயரை ஜபிக்கலாம்; அவர்மீது தியானம் செய்யலாம். எது அவசியமானது என்றால் அவரை நினைப்பதும், அந்த நினைப்பைத் தொடர்ந்து மனதில் இருத்திக் கொள்வதும்தான். உங்கள் மனம் எப்போதும் கடவுளை நினைத்துக்கொண்டே இருக்கிறதா என்று பார்த்துக்கொள்வது உங்கள் கடமையாகும்.

நீங்கள் உங்களுடைய உலகக் கடமைகளைச் செய்யும்போது உங்கள் மனம் எப்போதும் கடவுளையே மையமாகக் கொண்டிருக்கும்படி பார்த்துக்கொள்ளுங்கள். நீங்கள் வெளியே விடும் ஒவ்வொரு மூச்சோடும் உள்ளே இருக்கும் ஒவ்வொரு மூச்சோடும், ஒவ்வொரு முறையும்பகவானின் பெயரைச் சொல்லி ஜபிக்கும் பழக்கத்தை உருவாக்கிக்கொள்ள முயல வேண்டும். இப்படிச் செய்வது கைவந்துவிடுமானால், அதன் பிறகு ஜபம் செய்யும் எண்ணிக்கையை ருத்திராட்சத்தை வைத்து எண்ணுவதோ, விரலைக்கொண்டு எண்ணுவதோ தேவையில்லை. மேற்சொன்னபடி எல்லாக் காலங்களிலும், எல்லா நேரங்களிலும் ஜபம் செய்துக்கொண்டே இருக்க வேண்டும்.

நீங்கள் ஜபமும் தியானமும் நாள்தோறும் செய்கின்ற பழக்கத்தைத் தவறாமல் கைக்கொள்ள வேண்டும். அது கொஞ்சம் கொஞ்சமாக மனதை அலையாமல் இருக்கச் செய்யும். மனம் நிலையில்லாமல் ஓடினாலும் கூட நாள்தோறும் காலையிலும் மாலையிலும் தவறாமல் ஜபம் செய்யுங்கள். மனதைச் சரியாக ஒருமுகப்படுத்த முடியவில்லை என்ற ஒரே காரணத்திற்காக ஜபம், தியானம் ஆகியவற்றை விட்டுவிடாதீர்கள். ஆரம்பத்தில் மனம் ஒருமுகப்படாதது பற்றிக் கவலைப்படத் தேவையே இல்லை. நாளடைவில் எல்லாம் சரியாகிவிடும். மனம் ஒரு நிலையில் நிற்காமல் நாலாபக்கங்களிலும் ஓடுவது என்பது உண்மைதான். ஆனால் அது எப்போதோ ஒருமுறை பதினைந்து நிமிடங்களுக்கு ஒரு நிமிடம்தான் அப்படி ஓடும். பதினான்கு நிமிடம் மனம் நிலைத்து நிற்கும். அது போதுமானது. நீங்கள் நாள்தோறும் தொடர்ந்து முறையாகத் தியானம் செய்கிறீர்களோ இல்லையோ, ஆனால் அவற்றை முழுதாக எப்போதும் விட்டுவிடாதீர்கள். ஜபம் ஒருவரைத் தியானத்திற்கு அழைத்துச் செல்கிறது. தியானம் சமாதிக்குக் கொண்டுபோகிறது. ஆழ்ந்த தியானத்தில் தெய்விகக் காட்சிகள் தோன்றிப் பேரானந்தத்தைத் தருகின்றன. பேலூர் மடத்தில் மூன்று நான்கு நாள் தங்கி, இடையூறு ஏதும் இல்லாமல் தன்னந்தனிமையான சூழலில் தியானம் செய்வது ஒருவருக்கு ஆன்மிக அனுபவங்களைப் பெற மிகவும் துணை செய்யும்.

மனதை நிலைநிறுத்தித் தியானம் செய்வதற்கான பொருத்தமான இடங்கள் நம் உடம்பில் மூன்று இடங்களில் உள்ளன. அவை இதயம், இரண்டு புருவங்களுக்கும் இடைப்பட்ட பகுதி, சஹஸ்ரம் எனப்படும் உச்சந்தலை. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தியானம் செய்வதற்கு மனதை நிறுத்த மிகச் சிறந்த இடம் இதயம் என்று கூறுவார். இதயத்தினுள் மனதை நிறுத்தித் தியானம் செய்வதுபற்றி விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் என் அன்புக்கு உரியவர்களே! இதயத்திற்குள் எவ்வளவு ஆழமாக நாம் செல்ல முடியும்? பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், தமது படத்தின் மீது—படத்தில் இருக்கும் ஓம் வடிவை இதயத்தில் நிறுத்தித் தியானம்செய்வது போதுமானது என்று கூறியுள்ளார்.

தியானம் செய்வதற்கு மிகச் சிறந்த நேரம் நடுஇரவாகும். இந்த நேரத்தில் தியானம் செய்வதனால் மிக விரைவில் சிறந்த பலன்களைப் பெறலாம். அந்த நேரத்தில் அமைதிமயமாக இருக்கும் இயற்கை, நம் மனதை எளிதில் ஒருமுகப்படுத்தத் துணை செய்கிறது.

ஆன்மிக வாழ்வில் வெற்றிபெற நமக்குத் தேவையானது நம்பிக்கை, பொறுமை, கடவுளையே சார்ந்திருத்தல், முதலியவை

தாம். இதன் மூலம் படிப்படியாக நாம் கடவுளைச் சென்றடையலாம். பகவானுடைய பெயரை ஜபியுங்கள். அமைதி தானாக வரும்.

கடவுள்மீது நீங்கள் தியானம் செய்வது, அவரைக் காண நம்மைப் பைத்தியமாக்கி எல்லாவற்றையும் விட்டு நம்மை ஓடச் செய்யும். கடவுள் வாழ்வின் வற்றாத ஊற்றாக இருக்கிறார். அந்த அமுத நீரூற்றில் மகத்தான ஆன்மாக்கள் அனைவரும் மூழ்கி ஆழ்கின்றனர். கடவுளோடு தன்னை முழுக்க முழுக்க இணைத்துக்கொள்ளாத எவரும் ஆன்மிக வாழ்வில் சிறப்படையவே முடியாது. நடு இரவில் எழுந்துகொண்டு நீங்கள் கடவுள் மீது தியானம் செய்யவேண்டும். கடவுளிடமிருந்து நேரே அழைப்பு வந்து, அவரைக் காணப் பறந்து செல்வதுபோல உங்களுடைய உற்சாகம் ஆற்றல் அனைத்தையும் திரட்டித் தியானத்தில் ஈடுபடுங்கள்.

காலையும் மாலையும் இரவும் அன்னை பராசக்தியின் அருளை வேண்டுங்கள். 'தாயே! கடவுளைக் காண்பதற்கு எந்த நுட்பமான அறிவு தேவையோ, அந்த நுட்பமான அறிவை எனக்குக் கொடுங்கள்' என்று அன்னையிடம் பிரார்த்தனை செய்யுங்கள். காயத்திரி மந்திரத்தில் கூறப்பட்டுள்ளது போல் பிரார்த்தனை செய்யுங்கள்.

நான் கொடுத்த மந்திரத்தை நீ இடைவிடாது ஜபித்துக்கொண்டே இருந்தால் உலகத்தின் மாயையாகிய மேற்பூச்சு உடைந்து நொறுங்கிப்போகும். கடவுளின் காட்சிகளா? உங்கள் மனம் மந்திர ஜபத்தின் மூலம் நிலையான தெய்விகக் காட்சிகளைக் காணும். ஆனால் அதையும் தாண்டி நெடுந்தொலைவு போன பிறகே, தெய்விகக் கடலின் அளப்படும் பேரானந்தத்தில் ஒன்று சேர முடியும். ※

---

# இதைக் கேள், நண்பனே!



ஆண்டவன் எவனை அறிகிறானோ அவனுக்குத்தான் முக்தி கிடைக்கும். எனவே, ஆண்டவன் ஒருவனே துதிப்பதற்கு உரியவன்.

ஆன்மஞானமுள்ளவன் சாவுக்கு அஞ்சமாட்டான்; அது பிறப்புடன் வந்தது என்பதை அவன் அறிவான்.

நண்பனே, நீ எல்லாரிடமும் இனிமையாகப் பேசு. உன்னைப் பகைப்பவன் எவனும் கூடாது அனைவருக்கும் நன்மை தேடு. எந்தத் திசையில் சென்றாலும் புகழ் விளையும்படி நற்செயலாற்று. அரிய வாழ்வைத் தினமும் பயனுடையதாக்கு

எழுச்சியும் முன்னேற்றமும் ஒவ்வோர் உயிருக்கும் பிறப்பிலே கிடைத்த உரிமை. கதிரவனைக் காலையும் மாலையும் வணங்கி, உடலுறுதி பெற்று, வீர வாழ்வு எய்துவாயாக.

சிறு பொருளையும் இகழாதே அவமதிக்காதே. உன் வலக் கையில் செயல்திறமை இருக்கிறது; இடக் கையில் வெற்றி உள்ளது.

உன் தாய் பூமி; நீ அதன் புதல்வன். முதுமை வரு முன்பு தரையில் விழுந்து மரிக்காதே.

நூறு கைகளால் பொருள்களைச் சேமித்து வை; ஆயிரம் கைகளால் அந்தப் பொருள்களை வழங்கு.

நீ பிறருக்கு இடும் உணவு இனியதாக, புஷ்டி தருவதாக இருத்தல் வேண்டும்.

இறைவன் உனக்கு ஒளிமயமான வாழ்வையே அளிப்பான்.

—அதர்வ வேதத்தில் சில துளிகள்

# அருள்நெறிக் கதை

## சிறந்த கொடையாளி

நரேந்திரன்

பழங்காலத்தில் புகழ் பெற்ற சூதாடி ஒருவன் இருந்தான். சூதாடும் இழிதொழில் செய்து வந்த அவன் தேவர்களையும் அந்தணர்களையும் நிந்தித்து வந்தான். இதைத் தவிர அவன் உலகில் இருக்கும் மற்ற எல்லாவிதக் கெட்டபழக்கங்களும் கைவரப் பெற்றவனாக இருந்தான்.

ஒரு நாள் அவன் மிகவும் தந்திரத்துடன் சூதாட்டத்தில் அதிக அளவில் பொருளைப் பெற்றான். மனம் மிகவும் மகிழ்ச்சியடை யவே தன் கையாலேயே பீடா தயாரித்து எடுத்துக்கொண்டு, சந்தனம், மாலை போன்ற பொருள்களுடன் ஒரு விலைமாதின் வீட்டை நோக்கி வெகு விரைவாகச் சென்றுகொண் டிருந்தான்.

வழியில் கால் தள்ளாடிக்கொண்டே கீழே விழுந்து நினைவிழந்தான். நினைவு திரும்பி யதும் அவன் தன் உள்ளத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டதை உணர்ந்தான். அவனுக்குத் தனது தீய வாழ்க்கையைக் குறித்து மிகவும் வருத்தம் உண்டாயிற்று. அதன் பயனாக வைராக்கியம் ஏற்பட்டது. பிறகு மனத் தெளிவு பெற்றுச் சுத்தமான மனதுடன் தன் கையிலிருந்த பொருள்கள் அனைத்தையும் அங்கிருந்த ஒரு சிவலிங்கத்திற்கு அர்ப்பித்து விட்டு வீட்டிற்குத் திரும்பிச் சென்றான். அது ஒன்று மட்டும்தான் அவன் தனது வாழ்க்கை யில் செய்த ஒரே ஒரு புண்ணியச் செய லாகும்.

காலம் தன் வேகத்தில் சென்றுகொண் டிருந்தது. சூதாடியின் வாழ்க்கைப் பயணம் முடிந்தது. யமதூதர்கள் அவனை எமனுலகத் திற்கு அழைத்துச் சென்றனர். யமதர்ம ராஜன் அவனைப் பார்த்து, "முட்டாளே! நீ செய்துள்ள இழிசெயல்கள் காரணமாக நரகத்தில் மிகவும் கடுமையான வேதனைகளை நீ அனுபவிக்கத் தகுந்தவன்" என்று கூறினான்.

அதைக் கேட்டு நடுநடுங்கிப் போன சூதாடி யமதர்மனைப் பார்த்து, "சுவாமி! நான் ஏதாவது புண்ணியம்கூடச் செய்திருக்கக் கூடும் அல்லவா? தயவு செய்து அதன் பயனைப் பார்த்துத் தீர்ப்புக் கூறுங்கள்" என்று வேண்டிக்கொண்டான்.

யமதர்மன் சித்திரகுப்தனைப் பார்த்தான்.

**சித்திரகுப்தன் :-** நீ இறப்பதற்கு முன் சிறி தளவு சந்தனத்தைச் சிவலிங்கத்திற்கு அளித் துள்ளாய். அதன் பலனாக நீ சுவர்க்கத்தின் அரியணையில் மூன்று நாழிகைநேரம் அரசனாக வீற்றிருக்கத் தகுந்தவனாகிறாய்.

**சூதாடி :-** அப்படியானால் எனக்கு முதலில் சுவர்க்கத்தில் நான் அனுபவிக்க வேண்டி யதை அனுபவிப்பதற்கு அனுமதி கொடுங் கள். பிறகு நரகத்தில் நான் படவேண்டிய அனைத்தையும் பட்டுக்கொள்கிறேன்.

உடனே யமதர்மனின் கட்டளைப்படிச் சூதாடி சுவர்க்கலோகத்திற்கு அனுப்பப் பட்டான். தேவகுருவான பிருகஸ்பதி இந்திரனை அழைத்து அவனுக்குப் பல வகை யிலும் எடுத்துச் சொல்லி, மூன்று நாழிகை நேரம் அவனது அரியணையில் ஏறி அரசனாக இருக்க அந்த சூதாடிக்கு இடம் அளிக்க வேண்டும் என்று கூறினார். மூன்று நாழி

கைக்குப் பிறகு இந்திரனை மறுபடியும் தன் அரச பதவியை ஏற்றுக்கொள்ளும்படி கூறினர்.

இந்திரன் அரியணையிலிருந்து இறங்கவே, தூதாடி தேவருலகிற்கு அதிபதியானன். இன்னும் மூன்று நாழிகை இருக்கிறதே! தூதாடி சிந்தித்தான். 'சிவபெருமானைத் தவிர நமக்கு வேறு புகலிடம் கிடையாது' என்று மனதிற்குள் தீர்மானித்துக்கொண்டான். பொருளின் மீது இருந்த பற்றுதல் அவன் மனதிலிருந்து நழுவத் தொடங்கியது. உடனே தன் அதிகாரத்திற்கு உட்பட்ட பொருள்களைத் தானமளிக்கத் தொடங்கினன்.

சிவபெருமானின் பக்தனை அவன், தேவேந்திரனது மிகவும் புகழ் பெற்ற ஐராவதம் என்ற யானையை அகஸ்தியருக்கு அளித்தான். உச்சைச்ரவா என்ற குதிரையை விசுவாமித்திர முனிவருக்குக் கொடுத்தான். காமதேனு என்னும் பசுவை வசிஷ்ட மகரிஷிக்கு வழங்கினன். சிந்தாமணி என்னும் இரத்தினத்தை, காலவ மகரிஷிக்குக் கொடுத்தான். கல்ப விருக்ஷத்தைப் பறித்துக் கௌண்டின்ய முனிவருக்கு அளித்துவிட்டான். இவ்வாருக அவன் மூன்று நாழிகை நேரம் ஆகும் வரையிலும் தானமளித்துக் கொண்டே இருந்தான். சுவர்க்கத்தில் இருந்த விலைமதிப்பற்ற பொருள்கள் எல்லாவற்றையும் தானமளித்து விட்டான். மூன்று நாழிகை முடிந்ததோ இல்லையோ, பேசாமல் அரியணையைவிட்டு இறங்கிச் சென்று விட்டான்.

தேவேந்திரன் திரும்பி வந்து பார்த்தபோது அமராவதி நகரமே செல்வம் குன்றிப் பொலிவிழந்து காணப்பட்டது. உடனே அவன் குலகுருவான பிருகஸ்பதியை அழைத்துக் கொண்டு யமதர்மராஜனிடம் சென்றான். மிகுந்த கோபத்துடன் யமதர்மனைப் பார்த்து, "தர்மராஜாவே, தாங்கள் என் பதவியை ஒரு தூதாடிக்கு அளித்து மிகவும் தகாத காரியத்தைச் செய்துவிட்டீர்கள்! அவன் அங்கே சென்று மிகவும் அடாத காரியங்களைச் செய்துவிட்டான். உண்மையாகவே அவன் என் விலையுயர்ந்த இரத்தினங்கள் அனைத்தையும் முனிவர்களுக்குத் தானமாக அளித்து விட்டான். வந்து அமராவதி நகரைப் பாருங்கள்! சூறையாடப் பட்டதைப் போன்று எவ்வளவு சூன்யமாகக் காணப்படுகிறது என்பதைத் தாங்களே தெரிந்து கொள்வீர்கள்" என்ருன்.

யமதர்மன், "தேவேந்திரா! தங்களுக்கு வயது அதிகமானதனுல் கிழவராகி விட்டீர்கள். ஆனுலும் தங்களுக்கு அரசாங்க விஷயமான பற்று இன்னும் விட்டுப் போகவில்லையே! தூதாடி செய்த செயலால் அவனுக்கு இப்போது கிடைத்திருக்கும் புண்ணியம் நீங்கள் செய்த நூற்றுக்கணக்கான வேள்விகளைவிட அதிகமாகிவிட்டது. தன் வசம் மிகப்பெரிய அதிகாரம் ஒப்படைக்கப்பட்ட பின்பும் எவன் சிறிதளவும் கர்வம் ஏற்படாமல் நற்காரியங்கள் செய்வதில் ஈடுபடுகிருனே அவனே மேலானவன். செல்லுங்கள். முனிவர்களுக்குத் தேவையான பொருளைக் கொடுத்தோ அல்லது அவர்களின் கால்களில் விழுந்தோ உங்கள் இரத்தினங்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறினன்.

இதைக் கேட்ட இந்திரன், "மிகவும் நல்லது" என்று கூறிவிட்டுத் திரும்பிச் சென்ருன். தூதாடியோ தான் முன்பு செய்த பாவச் செயல்களின் பலனக நரக வாழ்க்கை வாழ்வதினின்றும் விடுபட்டான். அத்துடன் மறுபிறவியில் அவன் மகா தபஸ்வியும் கொடையாளியுமான விரோசனனுக்குப் பலி என்ற பெயரில் மகனகப் பிறந்தான்.

— மகேசுவர காண்டம், கேதார காண்டம், அத். 18.





# வேதாந்த முழக்கம்

'அண்ணா' சுப்ரமண்யம்

### கடவுள் கிருபையால் முக்தி

71. வேற்றுமையற்ற காட்சி மோட்சம் அல்லது முக்தி. வேற்றுமைக் காட்சி சம்சாரம் அல்லது பிறவிச்சுழல்—இதுதான் வேதாந்தம் முழுவதினுடைய முடிவான உண்மை என்று வேதாந்தம் முழங்குகிறது.

72. கொள்கையில் பிடிவாதமாக இருப்பதனுலோ, பேச்சின் ஆவேச மாத்திரத்தினுலோ முக்தி கிடைத்துவிடாது. ஆத்மானுபவ ஞானம் இல்லாமல் முக்தி இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

73. ஆசை நிறைவேறுவதற்காகச் செய்யும் காமிய கர்மங்களிலும், சாஸ்திரங்களில் விலக்கப்பட்ட கர்மங்களிலும் மோட்சத்தின் வாசனைகூட இல்லை. அந்த மோட்சம் என்பது இறைவனின் அருளாலேயே அடையப்பெறுகிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

74. அறிபவனுக்கு ஆத்மாவானது தூரத்தில் இல்லை. ஆத்மா அறியப்படாவிட்டால் பெற்ற மனிதப்பிறவி வீணேயாகும். ஆத்மா அறியப்பட்டால் பிறவிப்பயன் எய்தப்பட்டதாகும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

### தன்னை மறந்த பத்தாவது ஆள்

75. பத்துப் பேர் அடங்கிய குழுவில் பிறரை எண்ணித் தன்னை எண்ண மறந்தவன்—பத்தாவதான தன்னை அறிந்து கொள்வதில் கஷ்டம் ஒன்றுமில்லை. அது போலவே தன்னுடைய ஆத்மா பிரம்மம் என்று அறிவதில் கஷ்டம் ஒன்றுமில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ பத்தாவது ஆள் — பத்துப் பேர் அடங்கிய குழு ஓர் ஆற்றை நீந்திக் கடந்தது. பிறகு அவர்களில் ஒருவன் எல்லோரும் வந்து சேர்ந்தார்களா என்று பார்க்க ஒவ்வொருவராக எண்ணத் தொடங்கித் தன்னை எண்ண மறந்துவிட்டு ஒருவனைக் காணேம் என்று புலம்பத் தொடங்கினுன். அதைக் கண்ட ஒருவன் புலம்பியவனை ஓர் அடி அடித்து, 'நீதான் பத்தாவது ஆள். உன்னை நீ எண்ணவில்லை' என்று சுட்டிக் காட்டினுன்.

அது போலவே பிரம்மத்தைத் தேடுபவன் தானேதான் பிரம்மம் என்பதை முதலில் அறிவதில்லை. ]

76. உண்மைநிலையை மறைக்கும் உபாதிகளான தோஷங்களை விலக்கிவிட்டுப் பொருள்கள் எப்படி ஏற்றுக்கொள்ளப்படுகின்றனவோ, அது போன்றே எது நாமரூபமாகக் காணப்படும் பிரபஞ்சமோ அதை விலக்கிவிட்டு, பிரம்மமானது அறியப்பட வேண்டும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

77. புலன்களை நாடும் மனிதர்களுக்குத் துன்பம் மிகுதியாகவும் இன்பம் வெகு குறைவாகவும் அமைந்திருக்கின்றன, பிரம்மத்தில் நிலைத்தவர்களுக்கு அளவற்ற இன்பம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ நிலையில்லாததும் சுகமில்லாததுமான இந்த உலகத்தை அடைந்து என்னையே பூஜிப்பாயாக. — கீதை 9-33. ]

78. உயிரை வாங்கும் பொருளாலும், பொருளைக் கொடுப்பவர்களாலும், புத்திரர் மனைவிமார் சகோதரர்களாலும், வீட்டினுலும் ஏற்படுவது நிச்சயமாகத் துன்பம்தான் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ ஸர்வமேவ துகம் விவேகின: —விவேகி களுக்கு எல்லாம் துன்பமே. — பதஞ்ஜலி யோக ஸூத்திரம் 2.15 ]

எப்போதும் பிரம்ம சிந்தனை

79. உறக்கத்திலிருந்து எழுந்து மீண்டும் உறங்கும் வரை ஒன்றேயாகிய பிரம்மம் நன்கு சிந்தனை செய்யப்படட்டும்; மனிதர்களுக்கு மரணம் வெகு தூரத்தில் இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ சாவு நெருங்கிக்கொண்டே இருப்பதனால் விழித்திருக்கும் நேரத்தைச் சிறிதும் வீண் போக்காமல் பிரம்ம சிந்தனையில் செலவிட வேண்டும். ]

சச்சிதானந்த திருஷ்டியே முக்தி

80 ஐந்து கோசங்களுக்கும் மாயையும் விபத்தும் அழிவும் பொருந்தும். அதற்குச் சாட்சியாக இருப்பது பிரம்ம விஞ்ஞானம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

81. பத்தாமவனைப் பற்றிய அறிவினால் ஒன்பது பேரை அறிந்தவனுக்கு எப்படிச் சுகமோ, அது போலவே ஜீவனுக்கு ஸத்தாகிய பிரம்மத்தை அடைவதில் சுகம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

82. வெளிநோக்கிப் பார்க்க வேண்டிய ஒன்பது பேரைக் காட்டிலும் வேறாகத் திரும்பி உள்நோக்கிப் பார்க்க வேண்டிய ஒருவன் இருக்கிறான். ஒன்பது பேரை வேறாக அறிந்தவன் அதல்லாத ஒன்றையும் அறிகிறான். அந்த அறிவினால் துரீயம் என்னும் முக்தி ஏற்படுகிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

83. ஒன்பது பேருக்கு ஒப்பான போலித் தோற்றங்களையும் ஒன்பது பேருக்கு ஒப்பான உபாதிகளையும், புதிய ஆத்ம உணர்ச்சியால் பொய்யென உணர்ந்து அசட்டை செய்து ஒதுக்கிவிட்டால், பத்தாவது மனிதனைப் போன்று எஞ்சி நிற்கும் உண்மைப் பொருளில் பேச்சுக்கு இடமில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

84. பரப்பிரம்மமாகிய தன்னிடத்திலேயே (ஜீவன்முக்தனாகிய அவன்) உலகனைத்தையும் கரைத்துவிட்டு அத்வைதத்தைப் பாடிக் கொண்டு ஆனந்தமாக இருக்கிறான் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ எவன் இவ்விதம் அறிந்தவனோ அவன் இந்த உலக வாழ்க்கையை நீத்து, பஞ்ச கோசங்களைக் கடந்து, ஆனந்தமயமான ஆத்மாவை அடைந்து, அனைத்திற்கும் அப்பாலுள்ள எல்லைநிலத்தில் நின்று, இஷ்டமானதை உண்பவனாகவும், இஷ்டமான உருவத்தை ஏற்பவனாகவும், இந்த உலகங்களில் ஆனந்தமாகப் பாடிக்கொண்டு சஞ்சரிப்பான்.]

85. உலகின் ஆரோபணம் அபவாதம் என்ற இரண்டிலும் எதிர்மறை உடன்பாடு என்ற நியாய வழிகளில் சிந்தனை செய்யும் போது உண்மையான ஆத்மசொருபம் எஞ்சி நிற்கிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ஆரோபம் — 'பழுதையில் பாம்பைக் கற்பனை செய்தல்' ஆரோபம் எனப்படும்

அபவாதம் — 'கற்பனை செய்த பாம்பு இல்லை' என்று காணுதல் அபவாதம் எனப்படும்.

எதிர்மறை — இது அல்ல இது அல்ல 'நேதி நேதி' என்பது இங்கு எதிர்மறை எனப்படுகிறது.

உடன்பாடு — இதுதான் உண்மை, இது தான் உண்மை என்பது இங்கு உடன்பாடு எனப் படுகிறது.]

86. உடல் படைத்த அனைவருக்கும் நாம ரூபங்களில் உள்ள அபிமானமே சம்சாரம் அல்லது பிறவிச் சுழலாக ஆகிறது. அனைத்தையும் சச்சிதானந்தமாகப் பார்ப்பதே முக்தியாக ஆகிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

அனைத்தும் பிரம்மம் என்று கண்டு ஆனந்தமாக இரு

87. சச்சிதானந்தத்தின் மெய்ம்மையும் நாமரூபங்களின் பொய்ம்மையும் அறியப்

பட்ட பின்பு, இது என்று இங்கே அறிவதற்கு என்ன இருக்கிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

88. ஆதாரமாவதும், தனக்கு வேறு ஆதாரமற்றதும், ஆதாரமனைத்திற்கும் ஆதாரமாவதும், தனது ஆதாரத் தன்மையால் அனைத்திற்கும் ஆதாரமாக உள்ளதும் பிரம்மம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

89. ஒன்றும் செய்ய வேண்டாம், ஒன்றும் அறிய வேண்டாம்; பிரம்மம் என்று தொடர்ந்து சிந்தித்துக்கொண்டு எப்படிச் சுகமோ அப்படி இருக்கலாம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

90. அறிவாளியாக இருந்தாலும் அல்லாதவனாக இருந்தாலும், மனிதன் நிச்சயமாக தனது கர்மமாகிற கயிற்றில் கட்டப்பட்டிருக்கிறான். அறிவாளி (அனைத்தும் பிரம்மம் என்று கண்டு) காலத்தைச் சுகமாகக் கழிக்கட்டும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

91. அனைத்தும் ஆத்மா என்ற அனுபவத்தினால் அறிவாளி செயலிலும் செயலின்மையிலும் மனதைத் தவிக்கச் செய்ய வேண்டாம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

92. கர்மமானது சிதாபாஸனான ஜீவனைத் தொடாது; பொய்யான உடல் முதலிய உபாதியையும் தொடாது. அப்படி இருக்கும் போது மிகவும் நிர்மலமாக விளங்கும் அடிப்படை ஆத்மாவை எப்படித் தொடும்? என்று வேதாந்தம் முழங்குகிறது.

93. நமக்கு இதுவரை மதிமயக்கம் காரணமாக இருந்து வந்த நிலை போதும். ஆச்சரியப்படத் தக்க வகையில் ஆத்மா பிரம்மம் என்ற பயமற்ற வேதாந்த பேரிகையின் முழக்கம் செவிக்கு இன்பம் தருவதாக இப்போது இந்த உடலில் இருக்கும்போதும் கேட்கப்படுகிறது.

94. பிரதிவாதிக்குப் பயமளிக்கும் வேதாந்த பேரிகையின் அந்த முழக்கம் ஸ்ரீமத் தட்சிணாமூர்த்தியின் திருவருளால் பிரம்ம நாட்டம் உடையவர்களால் கேட்கப் படட்டும்.

முற்றும்

## சிந்தனை மொழிகள்



* வாழ்க்கை என்னும் புத்தக அலமாரியில், கடவுள் என்பது, கிடைத்தற்கு எளிய — ஆனால் — அபூர்வமாய்க் கையாளப்படும் தகவல் நூல்.

* சாவைத் தேடி அலையாதே. அது உன்னைக் கண்டு பிடித்துவிடும். ஆனால் சாவை நிறைவாக்கும் பாதையைத் தேடு.

* பழங்காலத்தில் கூற்றுவனும் என்னைப் போல் ஒருவன். இப்பொழுதோ பந்தியில் எனக்கு அடுத்த இலையில் அவன் உட்கார்ந்திருக்கிறான். அவனுடன் நட்புப் பாராட்ட வேண்டிய தேவை எனக்கு ஏற்பட்டுவிட்டது.

* பாண்டம் நான்; பானம் கடவுளது. ஆண்டவன் தாகம் தணிக்க நிற்கிறான்.

* அடியார்க்கு ஆண்டவன் ஒருவனைத் தவிர வேறு சமயமில்லை.

* உள்நோக்கிச் செல்லும் பயணமே நெடுந்தொலைப் பயணம்.

* அழுவாய், மகனே, அழுவாய்! இயன்ற வரையில் அழுவாய்! அழுவாய் இன்னும்! அழுவது பற்றி ஆத்திரம் மட்டும் காட்டாதே! வழி நடைப் பாதையை வகுத்தெடுத்தவன் நீதானே.

* எல்லா மனிதர்கள் வாயிலாகவும் கடவுள் பேசுகிறார். அவர் முன் நீ திண்ணைப் பள்ளியில் படிக்கும் அரிச்சுவடி மாணவன்.

—டாக் ஹாம்மர் ஷோல்ட் எழுதிய குறிப்புக்கள்' என்ற நூலிலிருந்து.



# வியாசரின் காசி விஜயம்

விவேகானந்ததாசன்

காசியில் சிவபெருமான் 'விசுவநாதர்' என்ற பெயரில் சாந்நித்தியம் கொண்டிருக்கிறார். மணிக்கை படைத்த ஜகன்மாதா அங்கு 'அன்னபூரணி' என்ற பெயரில் கோவில்கொண்டிருக்கிருள்.

காசி க்ஷேத்திரத்தின் யஜமானராக விசுவநாதரும், யஜமானியாக அன்னபூரணியும் விளங்குவதால் அங்குள்ள மக்கள் எப்போதுமே செல்வச் செழிப்புடன் வாழ்ந்தார்கள் ; அதுமட்டுமின்றி மனநிம்மதியோடும் மன மகிழ்ச்சியோடும் வாழ்ந்தார்கள்.

காசியில் இருந்த மக்கள் செல்வச் செழிப்புடன் இருந்ததோடு, அதைப் பிறருக்கு வழங்கி மகிழும் மனப்பான்மைக்கு ஓர் இலக்கணமாகவும் திகழ்ந்தார்கள். எனவே காசிக்குச் செல்பவர்கள் வயிருர உணவும் மனம் மகிழப் பொருளும் பெற்றுத் திரும்பினுர்கள். எனவே காசி க்ஷேத்திரத்தின் புகழ் பாரததேசம் முழுவதும் பரவியது.

வேதங்களை நான்காகப் பிரித்தும், மகாபாரதம், புராணங்கள் ஆகியவற்றை இயற்றியும் நமது மதத்திற்குப் பெரிதும் உபகாரம் செய்தவர் வியாச பகவான்.

''காசி க்ஷேத்திரத்தில் பசியால் வருந்துபவர்களே கிடையாது. பண வசதி படைத்த மக்கள் அங்கு எப்போதும் ஏராளமான தான தர்மங்களைச் செய்தபடியே இருப்பார்கள்'' என்று அடிக்கடி காசி க்ஷேத்திரத்தை மக்கள் வானளாவப் புகழ்ந்து பேசுவது வியாச பகவானின் காதிலும் விழுந்தது.

இவ்விதம் காசி க்ஷேத்திரத்தின் மகத்துவத்தைப் பற்றிப் பலரும் பலவேறு சந்தர்ப்பங்களில் சொல்லக் கேட்ட வியாசர், ''என்ன ! இவ்வளவு பெருமைகளும் கொண்டதாக இந்த உலகத்தில் ஓர் இடம் இருக்க முடியுமா ? மக்கள் காசியைப் பற்றி சொல்வதில் எவ்வளவு தூரம் உண்மை இருக்கிறது என்பதை நானே ஒரு தடவை நேரில் சென்று பார்க்கப்போகிறேன்'' என்று தமக்குள்ளாகத் தீர்மானித்துக் கொண்டார்.

ஒரு விஞ்ஞானி தான் கேள்விப்பட்டிருந்த முடிவுகளைப் பரிசோதனைச் சாலையில் ஆராய்ந்து பார்ப்பது போல, வியாசர் காசியின் மகத்துவத்தைத் தாமே நேரில் சென்று பரிசோதிக்க விரும்பினுர்.

வியாசபகவான் காசிக்குச் செல்வது பற்றிய தமது முடிவைச் சீடர்களிடம் அறிவித்தார். குருநாதரின் முடிவைக் கேட்டதும், விதவிதமான சுவை மிகுந்த உணவு வகைகள் ஏராளமாகத் தங்களுக்குக் கிடைக்கும் என்ற எண்ணம்தான் சீடர்களின் உள்ளத்தில் தலைதூக்கி நின்றது. ஆகவே அவர்கள் வியாசரின் யோசனைக்கு மகிழ்ச்சியுடன் தங்களின் பரிபூரணச் சம்மதத்தைத் தெரிவித்தனர்.

வியாசருடன் சீடர்கள் அனைவரும் மிகுந்த ஆவலுடன் காசிக்குப் புறப்பட்டார்கள்.

ஒரு நாள் காலையில் வியாசர் தமது சீடர்களுடன் காசி க்ஷேத்திரம் வந்து சேர்ந்தார். அங்கு முதல் காரியமாக ஒரு தர்ம சத்திரத்தில் தங்கள் கோஷ்டியினர் தங்குவதற்கு அவர்கள் ஏற்பாடு செய்து கொண்டார்கள். பின்னர் அனைவரும் கங்கையில் நீராடிவிட்டுப் பிக்ஷை சேகரிப்பதற்காக ஊரின் பல பாகங்களுக்குப் பிரிந்து சென்றனர்.

அன்று மாலை வியாசர் உட்பட அனைவரும் பசியால் வாடிய முகத்துடன் தங்கள் இருப்பிடமான சத்திரத்திற்குத் திரும்பி வந்தனர். பின்பு ஒருவருக்கு ஒருவர் அன்றைய தினம் தாம் பிக்ஷைக்குச் சென்ற பகுதி, பெற்ற அனுபவம் போன்றவற்றைத் தங்களுக்குள்ளாகக் கலந்து பேசிக்கொண்டார்கள். அப்போது, அவர்களுள் ஒரே ஒருவருக்குக்கூட ஒரு கவளம்உணவுகூடப் பிக்ஷையின்போது கிடைக்கவில்லை என்ற விவரம் அவர்களுக்குத் தெரிய வந்தது. அத்தனை பேரில் ஒரே ஒருவருக்குக்கூட ஒரு கவளம் உணவும் பிக்ஷையாகக் கிடைக்கவில்லை என்ற விவரம் அவர்களுக்குப் பெரிதும் வியப்பை உண்டு பண்ணியது. அவர்களால் அதை நம்பவே முடியவில்லை.

''ஒருவேளை இன்றைய தினம், இல்லறத்தவர் பிக்ஷை இடக்கூடாது என்று சாஸ்திரங்களில் தடை விதிக்கப்பட்ட நாளாக இருக்கக்கூடும். அதனால்தான் இன்று எவருமே பிக்ஷையிடவில்லை'' என்று ஒருவர் கூறினர்.

அதை மறுத்து மற்றொருவர், ''பிக்ஷையிடக் கூடாத நாள் என்று சாஸ்திரங்களில் எந்த ஒரு நாளும் குறிப்பிடப்படவில்லை'' என்றார்.

இவற்றைக் கேட்ட வியாச பகவான், ''இன்று ஆனது ஆயிற்று. நாளைய தினம் என்ன ஆகிறது என்று பொறுத்திருந்து பார்ப்போம்'' என்றார்.

இவ்விதம் அன்றைய தினம் அனைவருமே பட்டினியாக இருக்கும்படி ஆயிற்று.

மறுநாள் வியாசர் உட்பட எல்லோரும் பிக்ஷைக்காக ஒவ்வொரு தெருவாக அலைந்தார்கள். சில வீடுகளில், ''பிக்ஷையிடுவதற்கு எங்களிடம் எதுவுமில்லை'' என்று கூறிவிட்டார்கள். மற்றும் சில வீட்டுக்காரர்கள்,வியாசரின் சீடர் எவரேனும்தங்கள் வீட்டு முன்னால் பிக்ஷைக்கு வந்து நின்றவுடனே, முகத்தில் அறைவது போன்று கதவை இழுத்துத் தாழிட்டுக்கொண்டனர்.

வியாசர் உட்பட, சீடர்கள் எல்லோருக்குமே இவை போன்ற அனுபவங்களே அன்றைய தினம் ஏற்பட்டன. இத்தகைய அனுபவம் அவர்களை வருத்தம், ஏமாற்றம், அவமானம் ஆகியவற்றுக்கு உட்படுத்தியது. அந்த நிலையில் இரண்டாம் நாளையும் பட்டினியுடன் இருந்து கழித்தார்கள்.

மூன்றாவது நாளும் வந்தது. அன்றைய தினமும் முதல் இரண்டு நாட்களுக்கு ஏற்பட்ட அதேவிதமான அனுபவமே அனைவருக்கும் ஏற்பட்டன.

இதுபோலவே ஏழு நாட்கள் கழிந்தன.

எட்டாம் நாளன்று வியாசர் ஒரு வீட்டின் முன்பு பிக்ஷை கேட்டு நின்றார். ஆனால் அந்த வீட்டில இருந்தவர்கள் வியாசரின் குரலைப் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. வீட்டின் உள்ளேயிருந்து ஒருவரும் வெளியே வரவுமில்லை, பிக்ஷையிடவுமில்லை. இதைக் கண்டதும், ஏழு நாளாகப் பொறுமையுடன் இருந்த வியாசரின் கோபம் எல்லை கடந்து போயிற்று. அவர் காசியில் வாழும் மக்கள் அனைவருக்குமே ஒரு பெரிய சாபம் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் மிகுந்த கோபத்துடன் சாபம் கொடுப்பதற்காகத் தமது வலக் கையை உயர்த்தினர்.

அதே சமயம் எதிரிலிருந்த மாளிகை போன்ற ஒரு பெரிய ஒரு வீட்டின் கதவு திறந்தது.

கதவைத் திறந்த அந்த வீட்டின் தலைவி வியாசரை நோக்கி, ''நிறுத்துங்கள்'' என்றாள்.

என்ன ஆச்சரியம்! வியாசரால் தூக்கிய தமது வலக் கையைக் கீழே இறக்கவே முடியவில்லை.

சில விநாடிகளுக்கு இருவரும் ஒருவரை ஒருவர்பார்த்தபடியே மௌனமாக நின்றனர். பின்னர் அந்த மாது வியாசரை நோக்கிப் புன்முறுவல் பூத்தாள். உடனே வியாசரால் தமது கைகளைப் பழையபடியே அசைக்க முடிந்தது.

அந்த மாது அவரிடம், “நீங்கள், இவ்விதம் இந்த க்ஷேத்திரத்தின்மீது ஒரு காரணமும் இல்லாமல் கோபப்படுவதில் அர்த்தமே இல்லை” என்றாள்.

வியாசர், “என்ன? நான் கோபப்படுவதில் அர்த்தமா இல்லை? நாங்கள் இந்த ஏழு நாளாக இங்கே பிக்ஷை கிடைக்காமல் பட்டினியாக இருந்துகொண்டிருக்கிறோம். இந்த ஊரில் உள்ள இத்தனை பேர்களில் ஒரே ஒருவர்கூட எங்களில் எவருக்கும் பிக்ஷையளிக்க முன்வரவில்லை. அப்படி இருக்கும்போது நான் ஏன் கோபப்படக் கூடாது? ஏன் சாபம் தரக்கூடாது?” என்று வினவினார்.

அந்த மாது புன்சிரிப்புடன், “உங்கள் சீடர்களையெல்லாம் இங்கு என் வீட்டுக்கு அழைத்து வாருங்கள். உங்கள் அனைவருக்கும் விருந்து படைக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமானால் நான் பெரிதும் மகிழ்ச்சி அடைவேன்” என்று தெரிவித்துக் கொண்டாள்.

வியாசர் அந்தப் பெண்மணியுடன் வீணாக விவாதித்துக் கொண்டிருப்பதைவிட அவளது வேண்டுகோளை ஏற்றுக்கொள்வதே நலம் என்று தீர்மானித்தார். அதன்படி அவளது கோரிக்கைக்குச் சம்மதம் தெரிவித்துவிட்டு, தாம் சீடர்களுடன் தங்கியிருந்த சத்திரத்திற்கு விரைந்து சென்றார்.

அங்கே சத்திரத்தில், கடந்த ஒரு வார காலமாகப் பட்டினி கிடந்த சீடர்கள் பிக்ஷைக்குச் செல்வதற்கு நடக்கவும் சக்தியற்று, ‘குற்றுயிரும் குலையுயிரும்’ என்பது போல் பாதி உயிர் போன நிலையில் பசி காரணமாக முடங்கிப் படுத்துக்கிடந்தார்கள். அவர்களிடம் வியாசர், தம்முடன் உணவருந்தப் புறப்படுமாறு கூறினார். விரைவில் எல்லோரும் அந்த மாதுவின் வீட்டை அடைந்தனர்.

அவள் குழந்தைகளை வரவேற்கும் அன்பார்ந்த தாய்போல, அனைவரையும் வரவேற்றாள். அங்கே இருந்த பெரிய கூடத்தில் வியாசரையும் அவரது சீடர்களையும் உணவருந்த அமரும்படி கேட்டுக்கொண்டாள்.

வியாசரும் அவரது சீடர்களும் வரிசையாக அங்கே போட்டிருந்த ஆசனங்களில் அமர்ந்தனர். அவர்களின் எதிரில் வீட்டுத் தலைவியின் உத்தரவுப்படி பணியாட்கள் வாழையிலைகளை எடுத்துவந்து விரித்தனர். குடிப்பதற்குக் குவளைகளில் தண்ணீரையும் வாழையிலைகளின் அருகில் வைத்தனர். ஆனால் உணவு மட்டும் பரிமாறப்படவே இல்லை. அதற்கான காரணம் புரியாத நிலையில், சாப்பிட வந்திருந்தவர்கள் அனைவரும் அந்த மாதுவை நோக்கி விழித்தனர்.

வீட்டுத் தலைவியும் அவர்களை உற்றுப் பார்த்துவிட்டு, “ஏன் சாப்பிடாமல் சும்மா அமர்ந்திருக்கிறீர்கள்? சாப்பிட ஆரம்பிக்கலாமே!” என்றாள்.

அவள் அப்படிச் சொன்னதைக் கேட்டதும் வியாசருக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. மகா கோபத்துடன் அவர் அவளை நோக்கி ஏதோ சொல்ல வாயெடுத்தார். அதே சமயம் அவரது பார்வை தமது முன்னால் விரிக்கப்பட்டிருந்த வாழையிலைமீது விழுந்தது. அதே சமயம் அவர் அனைவரது இலைகளிலும் விதவிதமான உணவு வகைகள் தோன்றிவிட்டதைக் கண்டார். ஒவ்வொருவரும் தத்தமக்கு மிகவும் பிடித்தமான உணவு வகைகளே இலையில் பரிமாறப்பட்டிருந்ததைக் கண்டனர்.

அனைவரும் மிக்க மகிழ்ச்சியுடன் சாப்பிட ஆரம்பித்தனர். திருப்தியாகச் சாப்பிட்டு முடிந்ததும் தங்களுக்கு விருந்தளித்த வீட்டுத் தலைவியை நன்றியறிதலுடன் எல்லோரும்

நோக்கினர். வீட்டுத் தலைவியான அந்த மாது நின்றிருந்த இடத்தில் ஜகன்மாதாவான சாட்சாத் அன்னபூரணி கருணை பொங்க நின்றிருந்தாள். அவளுடன் ஜகத்பிதாவான காசி விசுவநாதரும் காட்சி தந்தார்.

சிவபெருமான் வியாசரிடம், "தாங்களும் தங்களது சீடர்களும் ஏன் இவ்வளவு துன்பத்திற்குள்ளாக நேரிட்டது என்பதை அறிந்து கொண்டீர்களா? உங்களில் ஒரே ஒருவர் கூட பக்தி சிரத்தையுடன் இந்த க்ஷேத்திர யாத்திரையை மேற்கொள்ளவில்லை. வியாசராகிய நீங்கள் ஏதோ அதிசயம் காண வேண்டும், காசி மகா க்ஷேத்திரத்தின் மகத்துவத்தைப் பரிசோதித்துப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்டே இங்கு வந்தீர்கள். உங்கள் சீடர்களோ நீங்கள் சொன்னதைப் புறத்தளவில் ஒரு காரணமாகக் கொண்டு அந்தரங்க உள்ளத்தில் பேராசையினால் உந்தப்பட்டு இங்கே வந்தார்கள். இத்தகைய எண்ணங்களோடு ஒருவர் காசி யாத்திரையை மேற்கொள்வது சரியாகுமா? பக்தியோடு வந்திருந்தால் உங்கள் அனைவருக்கும் ஆன்மிகமயமான வேறுவித அனுபவங்களே ஏற்பட்டிருக்கும்" என்றார்.

வியாசர் தமது குற்றத்தை உணர்ந்தார். அவரும் அவரது சீடர்களும் தம்முன் எழுந்தருளியிருந்த விசுவநாதரையும் அன்னபூரணியையும் பக்தியோடு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டுத் தங்கள் ஊருக்குப் புறப்பட்டார்கள்.

## என் தாய்நாடே!



"என் தாய்நாடே! உன்னிடம் நால்திசையும் பச்சைப் பசும் பயிர்கள் பரவி விளைந்துள்ளன. வயல்களில் விளையும் தானியம் உயிரினங்களைக் காக்கிறது. வள்ளற் பசுக்கள் பாலுணவை அளிக்கின்றன.

"என் தாய்நாடே! இந்தப் புண்ணிய பூமியில் எமது முன்னோர் அற்புதமான பெருஞ் செயல்களை ஆற்றினர். தெய்விகப் பண்பு வாய்ந்தோர், அசுர சக்திகளை ஒடுக்கித் துரத்தினர். விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் தாய் நீ.

"என் தாய்நாடே! பல பல நாட்டினர், பல மொழி பேசுவோர், பல வகை உடையினர்—அனைவரும் ஒரே குடும்பத்தினராக இந்தப் பூமியில் வாழ்கின்றனர். காமதேனு, இனம் பாராமல் அனைவருக்கும் பால் சுரப்பது போல, நீ எல்லாருக்கும் உறைவிடம் தந்திருக்கிறாய்.

"என் தாய்நாடே! ஆரோக்கியம் நிறைந்த பூமி இது. அச்சமற்ற, அழிவற்ற புனித நிலம் இது. இங்கு நாங்கள் நெடிய ஆயுளுடன், விழிப்புடன், ஆனந்தமாக வாழ்ந்து, உன்னைக் காக்க எம்மிடமுள்ள அனைத்தையும் அர்ப்பிப்போம்."

— அதர்வ வேதம், 12—1.

[344-ஆம் பக்கத் தொடர்ச்சி]

விளக்கும். தென்னகத்தில் வாழ்ந்த தமிழ் மக்களின் கார்த்திகை விளக்கீட்டைப் போல, வட இந்தியாவில் அக்காலத்து வசித்து வந்த தமிழ் மேன்மக்களும் ஐப்பசித் திங்களில் விளக்கு வரிசை வைத்து, அவற்றில் தோன்றும் பேரொளி வடிவினன் ஆன முழுமுதற் கடவுளுக்குத் திருவிழாக் கொண்டாடி வந்தனர். அதுதான் தீபாவளி (தீபம்-விளக்கு ; ஆவளி-வரிசை. 'நாமாவளி' என்பது காண்க) என்று வழங்கி வருகிறது என்பது, செந்தமிழ்க் கடல் சிவத்திரு பேராசிரியர் மறைமலையடிகளார் அவர்களின் கருத்து ஆகும்.

### மற்றும் பல வரலாறுகள்

தீபாவளியைப் பற்றி வேறு சில வரலாறுகளும் ஆங்காங்கே வழங்கப்படுகின்றன. மகிஷன் என்னும் அசுரனை, அம்பிகை காளி வடிவம் கொண்டு வென்று கொன்றருளிய நாள் தீபாவளி ஆகும். சிலப்பதிக்காரம் போன்ற மிகப்பழைய நூல்களிலும், அம்பிகை மகிஷாசுர மர்த்தனம் செய்த வரலாறு குறிப்பிடப்பெற்றுள்ளது. ஆதலின் அம்பிகை மகிஷாசுர மர்த்தனம் செய்தருளிய நாளே தீபாவளி விழா ஆயிற்று என்று சிலர் கூறுவர்.

வசிட்ட மாமுனிவரால் அயோத்தி மாநகரில் இராமபிரான் முடிசூட்டப்பெற்ற நாளே தீபாவளியாகும் என்றும் ஒரு வரலாறு உண்டு. ஆதிசங்கரர் தமது ஞானபீடங்களை நிறுவியருளியதும், சீக்கிய மதத்தலைவராகிய குரு நானக் இவ்வுலக வாழ்வை நீத்துத் தெய்விக நிலை பெற்றதும் அவர் வழிவந்த பத்தாம் குருவாகிய குரு கோவிந்தசிங் என்பவர் கால்சா என்னும் சமய அமைப்பை நிறுவியதும், 'சத்தியார்த்தப் பிரகாசம்' முதலிய சிறந்த நூல்களை எழுதியவரும் ஆரிய சமாஜத்தைத் தோற்றுவித்தவருமாகிய தயானந்த சரசுவதி சுவாமிகள் மறைந்தருளியதும் தீபாவளித் திருநாளிலேயே நிகழ்ந்தனவாகும்.

### முடிவுரை

தீபாவளி போன்ற விழாக்கள் நமது நாடு முழுவதிலும் பல கோடிக்கணக்கான மக்களால் மகிழ்ந்து கொண்டாடப்பெறும் சிறப்பு வாய்ந்தனவாகும். இயல்பாகச் சுவையின்றிக் கழிந்து செல்லும் மக்களின் வாழ்க்கை நெறியில், இடையிடையே போதரும் இத்தகைய விழாக்கள் புத்துணர்ச்சியையும் மகிழ்ச்சியையும் பொலிவையும் ஏற்படுத்தி, மக்களின் வாழ்க்கைக்குச் சுவையூட்டிப் பெரிதும் நலம் பயக்கின்றன மக்களின் உணர்வை ஈர்த்து ஒரு நெறிப்படுத்தி, ஒற்றுமை ஊட்டி மன்பதையை வாழ்விப்பதற்கும் இத்தகைய விழாக்கள் இன்றியமையாதனவாக இருக்கின்றன.

தொன்றுதொட்டு எத்தனையோ பல நூற்றுண்டுகளாகத் தொடர்ந்து வழிவழியே கொண்டாடப்பெற்று வருவதனால் இவ் விழாக்கள் பழமையும் பெருமையும் புனிதமும் தெய்விகமும் பெற்று விளங்குகின்றன. நம் முன்னோர் கொண்டாடி மகிழ்ந்த இத்தகைய விழாக்களை நாமும் கொண்டாடுவதன் மூலம், நமக்கும் அவர்களுக்கும் இடையறவு படாத ஒருவகைப் புனிதம் மிக்க பெருந்தொடர்பு என்றும் நின்று நிலவிவர வாய்ப்பு நிகழ்கிறது. ✵

---



**அச்சம் தவிர்க்க !**

காற்றும் இடைவெளியும் எதற்கும் அஞ்சுவதில்லை, மெலிவுறுவதில்லை. அது போல, மாந்தரே ! *நீங்கள்* அஞ்சாதீர், மெலிவுறுதீர்.

பெருவீரம் எதற்கும் அஞ்சுவதில்லை, மெலிவதில்லை. சாவும் அமுதத்தன்மையும் எதற்கும் அஞ்சுவதில்லை, மெலிவதில்லை. சத்தியம் எதற்கும் அஞ்சுவதில்லை, மெலிவதில்லை, கடந்த காலமும் எதிர்காலமும் எதற்கும் அஞ்சுவதில்லை. மெலிவதில்லை. இவை போலவே நீங்களும், மாந்தரே ! எதற்கும் அஞ்சாதீர், மெலிவுறுதீர். துணிவே வாழ்க்கை.

—அதர்வ வேதம், 2-15.

# செய்திகள்

**ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயத்தின் பொன்விழா**

கோயமுத்தூர், பெரியநாயக்கன் பாளையத்திலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம் இந்த ஆண்டு செப்டம்பர் 15-ஆம் நாள் தனது பொன்விழாவை விமரிசையாகக் கொண்டாடியது.

1930 பிப்ரவரி 3-ஆம் நாள் ஓர் அரிசன மாணவனுடன் ரூ. 5-75 காசு நிதியுடன் திரு தி. சு. அவினாசிலிங்கம் அவர்கள் கோயமுத்தூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயத்தைத் துவக்கினார்.

குழந்தைப் பள்ளியிலிருந்து டாக்டர் பட்டம் பெற உதவும் நிலையம் வரை பத்துப் பன்னிரண்டு கல்வி நிலையங்களுடன், இந்தியாவிலுள்ள மிக முக்கியமான கல்வி நிலையங்களுள் ஒன்றாகத் தற்போது வித்யாலயம் விளங்கி வருகிறது.

1980 செப்டம்பர் 15-ஆம் நாள் பொன் விழாவையொட்டி வித்யாலயத்தில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சங்கம் ஆகியவற்றின் உபதலைவராகிய ஸ்ரீமத் சுவாமி பூதேஷானந்தஜி மகராஜ் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி உரை நிகழ்த்தினர். இந்திய ஜனாதிபதி மேதகு என். சஞ்ஜீவரெட்டி அவர்களும் தமிழக ஆளுநர் திரு. பிரபுதாஸ் பி. பட்வாரி அவர்களும், மாண்புமிகக் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் அவர்களும் வித்யாலயத்தின் பணிகளைப் பாராட்டி சிறப்புரை நிகழ்த்தினர்.

பொன்விழாவின் நினைவு கட்டிடத்தை இந்திய நாட்டின் ஜனாதிபதி மேதகு என். சஞ்ஜீவிரெட்டி அவர்கள் திறந்து வைத்தார்.

பொன்விழாவில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த துறவியர் பலரும் கலந்து கொண்டனர்.

பொன்விழாவின் நினைவாக 50 ஆரம்ப பாடசாலைகள், 50 நடுநிலைப் பள்ளிகள், 50 உயர்நிலைப்பள்ளிகள் ஆகியவற்றுக்குப் பள்ளிகளுக்குத் தேவைப்படும் கருவிகள் (Kits பரிசோதனைச் சாலைக்குரிய இரசாயனக் கருவிகள்) வழங்கப்பெற்றன.

மற்றும் வித்யாலயத்தின் வளர்ச்சிக்குத் தொண்டு புரிந்தவர்கள், 25 ஆண்டுகளாக ஆசிரியராக இருந்து சேவை செய்தவர்கள் ஆகியோருக்கும் பொன்விழா நினைவுப் பரிசு வழங்கப் பெற்றது.

பொன்விழா நிகழ்ச்சியில் சுமார் 2000 பொதுமக்கள் கலந்து கொண்டனர்.

வித்யாலயத்தின் ஆதியும் நடுவும் அந்தமுமாக இருந்து அருந்தொண்டாற்றி வரும் தி. சு. அவினாசிலிங்கம் அவர்களின் பணி அனைவரின் மனமார்ந்த பாராட்டுதலுக்கு உரியது என்பது வெள்ளிடைமலை.

**ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் பொன்விழா**

கொழும்புவிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கிளை தனது ஐம்பதாண்டு நிறைவு விழாவை இந்த ஆண்டு செப்டம்பர் 21 தேதி முதல் 28 தேதி வரை எட்டு நாட்களுக்கு விமரிசையாகக் கொண்டாடியது.

ஒவ்வொரு நாளும் காலை, மாலை ஆகிய இரண்டு வேளைகளிலும் விழா நிகழ்ச்சிகள் இடம் பெற்றன.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸ்ரீ அன்னை சாரதா தேவியார் ஸ்ரீமத் சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் திருவுருவப் படங்களைத் தாங்கிய ஊர்வலம், அன்னதானம், நகர சங்கீர்த்தனம், பூஜை, பக்திப் பாடல் நிகழ்ச்சிகள், மாணவர்களுக்கு பரிசு வழங்கல், மத சம்பந்தமான நாடகங்கள், கலை நிகழ்ச்சிகள், சிறப்புச் சொற்பொழிவுகள்,

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸ்ரீ சாரதா தேவியார் ஸ்ரீ சுவாமி விவேகானந்தர் வரலாறுகளைக் கொண்ட திரைப்படங்கள் ஆகியவற்றுடன் ஒவ்வொரு நாளும் விழா மங்களகரமாக விளங்கியது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்—சங்கம் ஆகிய வற்றின் உபதலைவர் ஸ்ரீமத் சுவாமி பூதேஷா னந்தஜி மகராஜ் அவர்கள், ஸ்ரீலங்காவின் பிரதமர் மேதகு ஆர். பிரேமதாஸ், சுவாமி கீர்த்திதானந்தர், சுவாமி சர்வக்ஞானந்தர், சுவாமி ஜீவனானந்தர், சுவாமி அவ்ய யானந்தர், தி. சு. அவினாசிலிங்கம், ஸ்ரீலங்கா வின் அமைச்சர் சி. ராஜதுரை, பார்லி மெண்ட் அங்கத்தினர் எம். சிவசிதம்பரம், ஹைகமிஷனர் எச். இ. தாமஸ் ஆப்ரகாம், அமைச்சர் எஸ். தொண்டைமான் பௌத்தத் துறவிகள், கிறிஸ்தவ பாதிரிமார்கள் உட்பட பல அறிஞர்கள் விழா நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு சிறப்புரை நிகழ்த்தினர்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் தேசிய பாடசாலையின் புதியக் கட்டிடத் திறப்பு விழா**

1905-ஆம் ஆண்டு சென்னை ஜார்ஜ் டவுனில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் தேசிய பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது. கடந்த 75 ஆண்டுகளாக இயங்கி வரும் இந்தக் கல்வி நிறுவனத்தின் புதிய கட்டிடத் திறப்பு விழா 3-10-80 ஆம் நாள் நடந்தேறியது.

சென்னை பேசின்பிரிட்ஜ் சாலையில் புதி தாகக் கட்டப்பெற்ற இப் பள்ளிக் கட்டிடத் தில் 3-10-80 ஆம் நாள் காலை 8 மணி முதல் 11-30 மணி வரை விசேஷ பூஜை, ஸ்ரீ ராம நாம சங்கீர்த்தனம் ஆகியவை நடை பெற்றன.

அன்று மாலை 5 மணிக்கு அங்கு நடை பெற்ற பொதுக்கூட்டத்திற்கு வந்திருந்த அன்பர்களை ஸ்ரீமத் தபஸ்யானந்தர் வர வேற்றுப் பேசினர். ஆறு லட்ச ரூபாய் செலவில் எழுந்துள்ள இந்தப் பாடசாலை பற்றிய அறிக்கையை ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தர் படித்தார்.

விழாவின் தலைவராகிய தமிழக ஆளுநர் திரு மிகு. பிரபுதாஸ் பி. பட்வாரி அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்களின் தொண்டு, இவை போன்ற நிறுவனங்களின் தேவைக் குறித்து சொற்பொழிவாற்றினர். அடுத்து பள்ளியைத் திறந்து வைத்த ஸ்ரீமத் சுவாமி பூதேஷானந்தஜி மகராஜ் அவர்கள் கல்வி, ஒழுக்கம், சேவை நிறுவனங்களின் படிப் படியான வளர்ச்சி, ஆன்மிகம் ஆகியவை பற்றிய அரிய கருத்துக்களைத் தமது ஆசியுரையின்போது குறிப்பிட்டார். கல்வித் துறை துணை இயக்குநர் எஸ். ஏ. சுப்பிரமணியன் அவர்களின் உரையைத் தொடர்ந்து நன்றியுரையுடன் அன்றைய விழா இனிது நிறைவேறியது.

பள்ளியின் பிரார்த்தனை மண்டபத்தில் 4, 5, 6 தேதிகளில் மாலை 6-30 மணிக்கு திரு ஆர். கோதாண்டராமன் அவர்களின் இராமாயணச் சொற்பொழிவுகள் நடை பெற்றன. சொற்பொழிவின் முதல் நாளாகிய அக்டோபர் 4-ஆம் நாள் சுவாமி கமலாத்மானந்தர் இராமாயணச் சொற் பொழிவைத் துவக்கிவைத்தார்.

பள்ளியின் பிரார்த்தனை மண்டபத்தில் அக்டோபர் 7 , 9 ஆகிய தேதிகளில் மாலை 7 மணிக்கு அருட்பா அரசு நா. கிரிதாரி பிரசாத் அவர்கள் மகாபாரதச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். சொற் பொழிவின் முதல் நாளாகிய 7-ஆம் நாள் சுவாமி கமலாத்மானந்தர் அவர்கள் மகா பாரதச் சொற்பொழிவைத் துவக்கி வைத்து தலைமையுரை வழங்கினர். 8-ஆம் தேதி மாலை 7 மணிக்கு சுவாமி கமலாத்மானந்தர் ‘கண்ணனும் அர்ஜுனனும்’ என்ற தலைப்பில் உரையாற்றினர்.



ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தர். துணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர்
பதிப்பாளர்: சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004
அச்சிடுபவர்: K. L. செல்லப்பன், சுத்தானந்தா அச்சகம், சென்னை 600 020